தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்

5 கலர் டிவி

இரண்டு நபருக்கு மோட்டார் சைக்கிள்

10 தங்க வளையல்கள் (1பவுன்)

250 மி. லி. கிங் சைஸ் ரூ. 3.16 ஆதாயம் !

10 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 1000/-

200 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 500

400 நபர்களுக்கு ஒவ்வொரு வருக்கும் ரூ. 250/-

UJALA FOR SUPER WHITENESS OF CLOTHES

UJALA

## உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்

இப்போது உஜாலாவின் டாம்பர் - ப்ரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - ப்ரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்ற நாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமின்கள் இல்லாத ஒயிட்னர் உஜாலா-வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மையற்றது. அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.



Write to : **Jyothy Laboratories (UJALA), 2- A, Singarayar Mansion, Abhirami Avenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.**

# மனைவி கொடுத்த உற்சாகம்!



இலங்கை சுற்றுப்பயணத்தின் வெற்றிகரமான தோல்விக்குப்பின் இந்தியா திரும்பிவிட்டது நமது கிரிக்கெட் அணி. ஒரே ஆறுதல் – டெயில் – எண்டில் இருந்த ராபின் சிங், முதலில் இறங்கி அடித்து நொறுக்கியதும் நமது முதல் சர்வதேசப் போட்டி சதத்தை அங்கே ரகளையாக அடித்ததும்தான். ராபின் சிங்கை, சென்னையில் அவரது வீட்டில் சந்தித்தோம். பத்திரிகை பேட்டிகளை நேற்று வரை தவிர்த்து வந்தவர், முதல் முறையாகக் கல்கி வாசகர்களுக்காகப் பேசச் சம்மதித்தார். பேசும் போது ரொம்ப ஜாக்கிரதை காக்கிறார். இந்திய அணியின் மோசமான பந்து வீச்சு, அஸார் – டெண்டுல்கர் தகராறு, பெட்டிங் ஊழல் பற்றிய கேள்விகளுக்கெல்லாம் மூச்! வாயில் பிளாஸ்திரி! ஏதாவது பேசி வைத்தால் கிடைத்த வாய்ப்பும் போய்விடுமே? இனி பேட்டி :

"சர்வதேச அரங்கில் முதல் சதம் அடித்திருக்கிறீர்கள். வாழ்த்துக்கள். எப்படி அப்படி டென்ஷனே இல்லாமல் தொண்ணூறுகளைக் கடந்தீர்கள்? அதுவும் அந்தக் கட்டத்தில் ஒரு சிக்ஸர் வேறு!"

**ராபின் சிங்குடன் ஒரு சந்திப்பு**



" 'நாய் ஜாக்கிரதை' போர்டு போட்டிருந்தா என்ன? அதுக்காக இப்படி பயந்து ஓடியாரணுமா?"

"நீங்க வேற, 'அனகோண்டா ஜாக்கிரதை'ன்னு போர்டு போட்டிருக்கு!"

– பா. பர்வதா

"அஸாருதீனுக்குத்தான் நான் நன்றி சொல்ல வேண்டும். நான் தொண்ணூறை எட்டிப் பிடித்தபோது, அவர்தான் என் பதற்றத்தைப் போக்கும்விதமாகப் பேசி, உற்சாகமூட்டி, 'வழக்கம் போல் ஆடு' என்று அறிவுரை சொன்னார். நானும் ரஞ்சிப் போட்டி போலவே நினைத்துக் கொண்டு, கடைசியில் ஒரு சிக்ஸரும் சிங்கிளுமாக அரவிந்த டி சில்வாவின் பந்துகளைத் தூரத்தி விட்டு நூறைத் தொட்டேன்."

"முதல் சதம் அடித்தபோது உங்கள் மனநிலை...?"

"மாபெரும் ஆனந்தம். என் சதத்துக்குக் காரணமான அஸாரைக் கைகுலுக்கினேன். என்னை இந்திய அணியில் மீண்டும் சேர்த்த சச்சின், எப்போதும் என்னை உற்சாகமூட்டும் அஜய் ஜடேஜா, அனில்கும்ப்ளே, எனக்காக நாலு வருஷமாகப் போராடிய தினமலர் பத்திரிகை எல்லாரையும் மனத்தில் கூப்பிட்டு மானசீகமாக நன்றி சொன்னேன். ஆனாலும் அந்த மேட்சில் நாம் தோற்றது பெரிய வருத்தம்!"

"ஏழாவது, எட்டாவதாகக் களம் இறங்கிக் கொண்டிருந்தீர்கள். திடீரென்று மூன்றாவது பேட்ஸ்மனாக இறங்கி விட்டீர்களே?"

"முதல் 15 ஓவர்களில் யாராவது ஒரு அதிரடி ஆட்டக்காரர் இறங்கியே ஆக வேண்டும் என்று டீம் மீட்டிங்கில் பேசிக் கொண்டிருந்த சமயம் அனில் கும்ளேதான் என்னை சிபாரிசு செய்தார். ஏற்கெனவே தமிழக அணியிலும் தென்மண்டல அணியிலும் நான் ஓபனிங் பேட்ஸ்மனாக இறங்கியிருக்கிறேன். தவிரவும் ஜெயசூர்யாவே ஒருதரம் 'நான் முன்னணி ஆட்டக்காரனாக இறங்கினால் பிரகாசிப்பேன்' என்று சொல்லியிருந்ததும் டீம் தேர்வுக் கமிட்டியினர் கவனத்தில் இருந்தது. அதான்!"

"இத்தனை நாள் டீமில் சேர்க்கப்படாமல் போனதற்கு வருந்தினீர்களா? அதற்கு என்ன காரணம் என்று யோசித்தீர்களா?"

"வருத்தம் இல்லாமலா இருக்கும்? என் மனைவியின் உற்சாக வார்த்தைகள்தான் இத்தனை நாள் நான் சோர்ந்து போய் விடாமல் இருந்ததற்குக் காரணம். ஏன் சேர்க்கப்படவில்லை என்பதற்கான காரணங்களை ஆராய்ந்து கொண்டிருப்பது இனி வேஸ்ட். இனி சிறப்பாக ஆட வேண்டும் என்பதுதான் ஒரே குறிக்கோள்."

"வெஸ்ட் இண்டீஸில் பிறந்த நீங்கள், அங்கேயே இருந்திருந்தால் ஒருவேளை ஏற்கெனவே சர்வதேச அரங்கில் நுழைந்திருக்க முடியுமே என்று எண்ணியதுண்டா?"

"அங்கே நான் விளையாடிய அணியில்தான் வால்ஷ், சந்தர்பால், சைமன்ஸ் போன்ற பின்னாளில் புகழ்பெற்ற வீரர்களும் இருந்தார்கள். அங்கே எனக்கு சரியான வாய்ப்புகள் கிடைக்காததால்தான் இந்தியா வந்தேன்."

"பொதுவாகவே இந்திய அணியில் தமிழக வீரர்கள் தொடர்ந்து புறக்கணிக்கப்படுவதாகப் பேச்சு இருக்கிறது. நீண்ட நாளைக்குப் பிறகு ஸ்ரீகாந்த், டபிள்யூவி ராமன் இவர்களுக்குப் பிறகு இப்போது நீங்கள் வந்திருக்கிறீர்கள். இனி வேறு யாருக்காவது சான்ஸ் இருப்பதாக நினைக்கிறீர்களா?"

"சடகோபன் ராமன், சரத், ஷேமஸ்பதானி, ஸ்ரீராம், ரூபின்பால் போன்றோர் நிச்சயம் இடம்பெறுவார்கள். சரத்துக்கும் ரூபின் பாலுக்கும் அனேகமாக இந்த வருஷமே இடம் கிடைக்கும் என்று நினைக்கிறேன்."

"நீங்கள் குறிப்பிட்டவர்களுள் ரூபின் பால் மட்டும் விக்கெட் கீப்பர்-கம்-பேட்ஸ்மன். மற்ற யாவரும் உங்களைப் போலவே இடதுகை ஆட்டக்காரர்கள். அதனால்தான்..."

"இல்லையில்லை... பர்ஃபார்மன்ஸைத்தான் பார்க்க வேண்டும். நான் குறிப்பிட்ட அனைவருமே தங்கள் சாதனை மூலமே இடம்பிடிப்பார்கள். பொறுத்திருந்து பாருங்கள்."

பேட்டி : **சங்கரசுப்பிரமணியன்**

வண்ணப்படம் : **சாரி**

• ஆஸ்திரேலியாவில் மழை இல்லை....



# பூமியைத் தாக்கும் 'எல் நைனோ!'

மெக்ஸிகோவில் எதிர்பாராத சீசனில் புயலடிக்கிறது. சிலி மற்றும் பெரு ஆகிய நாடுகளில் மழை கொட்டித் தீர்க்கிறது. ஆஸ்திரேலியாவிலும், இந்தோனேஷியாவிலும் மழையே இல்லை.

விஞ்ஞானிகள் பதற்றமடைகிறார்கள். சக்தி மிகுந்த "எல் நைனோ" மீண்டும் உலகை ஆட்டிப் படைக்கப் போகிறதோ?

பூமத்திய ரேகைக்கருகில் உள்ள பசிபிக் மகா சமுத்திரத்தின் மூலமாக அக்கம்பக்கத்தில் உள்ள வெப்ப மண்டலப் பகுதியில் உள்ள நீர் நிலைகள் உஷ்ணமடைகின்றன. இது உலகெங்கிலும் சீராக இயங்கி வரும் தட்பவெப்ப நிலையை பாதிக்கிறது. இப்படி இந்தக் குறிப்பிட்ட பகுதியில் உள்ள நீர்நிலைகளை வெப்பமாக்கும் 'எல் நைனோ' நிகழ்வு இரண்டிலிருந்து ஏழு வருடங்களுக்கு ஒருமுறை என்று ஏற்படுகிறதாம். பருவக் காற்றின் வேகம் பசிபிக் பகுதியில் திடீரென்று பலவீனமடைவதுதான் இதற்கு முக்கிய காரணம்.

கடந்த 1982-83ல் ஏற்பட்ட 'எல் நைனோ'வில் - கடல் மட்டத்தின் வெப்பம் தாறுமாறாக ஏறிவிட - உயிரிழந்தவர்கள் இரண்டாயிரம் பேர். இதனால் பல்வேறு நாடுகளுக்கு ஏற்பட்ட பொருளாதார நஷ்டத்தின் மதிப்பு 130 கோடி டாலர்.

பொதுவாக 'எல் நைனோ' டிசம்பர் மாதத்தில்தான் உச்சகட்டத்தை அடைகிறது. இந்த ஆண்டு கடைசியில் பசிபிக் பகுதியில் உருவாக இருக்கும் 'எல் நைனோ', இந்த நூற்றாண்டின் மிக ஆபத்தான 'எல் நைனோ'வாக இருக்கக் கூடிய வாய்ப்பு தென்படுகிறதாம். சுமார் 9,700 கிலோ மீட்டர் கடல் பரப்பு (அதாவது, பூமியின் சுற்றளவில் நாலில் ஒரு பங்கு) இம்முறை பாதிக்கப்படலாம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

தற்போதைய கணக்குப்படி வரும் டிசம்பர் மாதம் கடல் மட்டத்தின் வெப்பம் 3.5 டிகிரி செண்டிகிரேட் உயரப் போகிறதாம். இது மட்டும் நடந்தால் புத்தாண்டு தொடக்கத்தில் நிலச்சரிவு, திடீர் வெள்ளம், பஞ்சம், விளைச்சலின்மை போன்ற பல விபரீதங்கள் உலகைச் சூழும்.

இம்முறை நிகழவிருக்கும் 'எல் நைனோ'வை விஞ்ஞானிகள் மிகவும் தீவிரமாக கண்காணிக்கப் போகிறார்கள். பசிபிக் பெருங்கடலைச் சுற்றியுள்ள வெப்பப் பகுதிகளை கப்பல்கள், செயற்கை கோள்கள் போன்ற பலவித சாதனங்களின் மூலம் கண்காணிக்கிறார்கள். கிடைக்கும் தகவல்கள் கம்ப்யூட்டர்களில் வேகமாகப் பதிவு செய்யப்படுகின்றன.

விஞ்ஞானிகளின் கவலை இன்னொரு கோணத்திலும் தொடர்கிறது. சமீபகாலம் வரை இரண்டிலிருந்து ஏழு வருடங்களுக்கு ஒரு முறைதான் 'எல் நைனோ' ஏற்படுவது வழக்கம். ஆனால் 1990லிருந்து தொடர்ந்து 'எல் நைனோ'க்கள் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. 1996ல்தான் கடைசியாக (சுமாரான பாதிப்பை ஏற்படுத்திய) 'எல் நைனோ' ஒன்று ஓய்ந்தது. அதற்குள் இப்போது அடுத்ததற்கான அறிகுறி. இதற்கு என்ன காரணம்? காற்று மண்டலத்தை மனிதன் தன் சொந்த ஆதாயங்களுக்காக நச்சுமயமாக்கியதன் விளைவா? அல்லது இயற்கையின் சுழற்சியில் சில நூற்றாண்டுகளுக்கு ஒரு முறை ஏற்படக்கூடிய ஒழுங்கு மீறலா? காரணம் தெளிவாக விளங்காவிட்டாலும் கண்ணெதிரே நிகழவிருக்கும் ஆபத்தைக் குறைக்க விஞ்ஞானிகள் (முக்கியமாக அமெரிக்க விஞ்ஞானிகள்) ஆராய்ச்சிகள், கருத்தரங்குகள் என்று வேகமாகச் செயல்பட்டு வருகிறார்கள்.

- ஜி.எஸ்.எஸ்



**கோத்ரெஜ் நிறுவனத்துக்கு இது நூற்றாண்டு நேரம். இந்தச் சந்தர்ப்பத்தில் கோத்ரெஜ் தொழில் நகருக்கு ஒரு விஸிட் அடித்தோம்.**

மனிதன், இயந்திரம், இயற்கை - இவை மூன்றின் அற்புதக் கலவையாய் எதிர் கொள்கிறது, எழில் கொஞ்சும் தொழில் நகரமான ஃபிரோஜ்ஷா நகர்!

மும்பையின், முகம் சுளிக்க வைக்கும் கசமுச தொழிற்பேட்டைகளினிடையே, கோத்ரெஜின் தொழிற்களம், ஓர் இதமான மாறுதல்! பச்சைப் பசேல் புல்வெளிகள், அடர்ந்த மரங்கள், பூஞ்சோலைகள், ...இடையிடையே 19 பெரிய தொழிற் கூடங்கள்; தாவர 'பிளாண்டு' களினூடே தொழில் 'பிளாண்ட்ஸ்'- Plants amidst plants?

நம்மை வரவேற்க வந்த பாவே ஆடம்ஸ், "முதலில் ப்ளாண்ட் எண்:11ல் உள்ள 'ஷோ' ரூமைப் பார்ப்போமா?" என்றார்.

"வெல்கம் டு கோத்ரெஜ்" என, ப்ளாக் போர்டு மாதிரி இருந்த ஒரு ஒயிட் போர்டில் எழுதி, கீழே சில சுவிட்சுகளை ஆடம்ஸ் தட்ட, படபடவென்று பேப்பர் ரோலில், அந்த வாசகம் நம் கையில்! "ஸெமினார்" சமயங்களில் நோட்ஸ் எடுத்து கஷ்டப்பட வேண்டாம்; ஆளுக்கொரு காப்பி கிடைத்து விடும்' என்றார் ஆடம்ஸ். ''அட! கல்லூரிகளில், பள்ளிகளில் அறிமுகப்படுத்தலாமே!'' என்றதற்கு, ''படுத்தலாம்; விலைதான் ஒரு லட்சம்'' என்றார் சிரித்துக் கொண்டே! ஐயையோ! பெற்றோரைப்படுத்தவா?

மேலே '∩' வடிவ கொக்கி இல்லாமல், ஒரே வட்டமாய், படு 'க்யூட்'டாயிருந்த பூட்டுகளைக் காட்டி "இது செஞ்சுரி ஸ்பெஷல்" என்றார். சாவியில் எக்கச்சக்க செதுக்கல்- "டிம்பிள்டு கீ"ஸாம்! எக்ஸ்ட்ரா பாதுகாப்பு!

வெறும் ரிஸீவர் தோற்றத்திலிருந்த ஒரு ஒல்லி ஃபோன், படு 'ஸ்லீக்!' கப்போர்டுகளில் ஒன்று, 'நானே ராஜா' என்ற கம்பீரத்துடன், 'மர'த்தனமான ப்ரௌன் ஃபினிஷில், பொன்னிறக் கிரணங்கள் உதய சூரியனாய் பளிச்சிட, வீற்றிருந்தது. "ஸ்டீல் கப்போர்டுதான்! நூற்

# எழில் கொஞ்சும்



றாண்டு ஸ்பெஷல்" என்றார் ஆடம்ஸ்! விலையும் ஸ்பெஷல்தான் - 14,000/- (தி.மு.க. அரசு வாங்கினால், 'ஸிம்பாலிக்'காக இருக்கும்.) ஸ்லைடிங் கதவுகளுடன், தண்டவாளம் மீது ஓடுவதுபோல், நகர்ந்து கொண்டிருக்கும் கப்போர்டும் புதுமையாயிருந்தது. (இடம் அதிகமில்லாத சின்ன ஃப்ளாட்டுகளுக்கு ஏற்றது!)

ஆபீஸ் ஃபர்னிச்சர்கள், அசப்பில் மரத்தாலானவை போன்று, பாலியுரேதின் ஃபினிஷில் அசத்தலாயிருந்தன. வழக்கமான ஃபிரிஜ், வாஷிங் மெஷின்கள், சிவப்புடன், நீலம், க்ரே கலர்களில்! ஆங்கிலத்துடன், இந்தி மராத்தியிலும் டைப் அடிக்கும் போர்ட்டபிள், எலக்ட்ரானிக், ஃபெதர் டச் டைப்ரைட்டரைப் பார்த்தால், டைப்பிங் தெரியாதவர்களுக்கே கைகள் பரபரக்கும்!

வெல்வெட் திண்டெல்லாம் போட்டுக் கொண்டு, 'ஸேஃபுகள்,' CBI சமாசாரங்கள் வைக்க 'வா, வா' என அழைப்பு விடுத்தன.

பாங்க் லாக்கர்களில் சில புதுமையான அகல நீள காம்பினேஷன்கள்! ஸ்ட்ராங் ரூமை சுற்றி ஒரு சுவர் உள்ளிருந்து, வேல், திரிசூலம் போல, என்னென்னவோ பயமுறுத்தின. சுவரை யாராவது வெடி வைத்துப் பெயர்த்தாலும், உள்ளே இருக்கும் "டாஸ் பார்ஸ்", திருடர்களை ஸர்ப்ரைஸாகத் தாக்குமாம்!

நேராக அங்கிருந்து, பூட்டு தொழிற்சாலை. செக்யூரிட்டிக்கு எதிராக ஒரு போர்டில், தொழிலாளர்களின் பிறந்த நாள், அந்த வருடத்திய விபத்துக்கள் போன்ற குறிப்புகள். "ஜீரோ ஆக்ஸிடெண்ட் ரேட்தான் எங்கள் இலக்கு" என்றார் ஆடம்ஸ்.

பாட்லாக், ஸேஃப்லாக், டோர்லாட்ககள் என விதவிதமான பூட்டுகள். இன்றளவும் லாபகரமானதாக, மொத்த டர்ன் ஓவரில் 10% இடத்தை இது பிடித்திருக்கிறதாம்.

முதலில் சாவிகள் செய்யப்பட்டு, அதற்கேற்ப பூட்டுகள் தயாராகும். மெஷினால் வடிவமைக்கப்பட்டு, ஆழமாக ஃபோர்ஜ் செய்யப்பட்ட சாவிகள். மெஷினாலேயே நம்பரும் செய்யப்படுகின்றன. ஒருவர், எண்களிடப்பட்ட சார்ட்டை வைத்துக் கொண்டு, அதற்கேற்ப சாவிகளை மெஷினில் கொடுக்க, அது படபடவென்று நம்பர்களை அடித்துத் தள்ளுகிறது. பின், பூட்டுகளுக்கான லீவர்கள் தயாராகின்றன. நன்றாகச் செய்யப்பட்ட நாலுலீவர் பூட்டு, அசிரத்தையாகச் செய்யப்பட்ட பத்து லீவர் பூட்டை விட மேலாம்! சாவிகளின்

# தொழில் நகரம்!

# ‘‘நான் உழைப்பை நம்புகிறேன்!’’

வாமன உருவத்துள் வானளாவிய மனம்; நட்சத்திரக் கண்களில், அறிவின் தீட்சண்யத்துக்கு வயது 86; திட்டமிடும் சுறுசுறுப்புக்கு வயது 26தான்! சுற்றுச் சூழல் பாதுகாப்பு, குடும்பக் கட்டுப்பாடு இரண்டும் இடதுகை வலதுகை போல! இந்த ‘உலகம் சுற்றிய முதிருரை’ இந்தியாவின் அம்பாஸடராக நியமிக்க இந்திரா காந்தி நினைத்திருந்தாராம்! ‘இவருக்கு எந்தக் காரியத்திலும் ‘excellence போதாது; perfectionவேண்டும்’ என்கிறார் இவரது நெடுநாளைய காரியதரிசி கிருஷ்ணஸ்வாமி. காத்ரெஜ் பாய்ஸ், காத்ரெஜ் சோப்ஸ் இரண்டுக்கும் உட்பட்ட அனைத்து கம்பெனிகளுக்கும் சேர்மனான சோரப்ஜி பிரோஜ்ஷா காத்ரெஜ், கல்கிக்கு அளித்த பிரத்யேக பேட்டியிலிருந்து:

**‘‘நூற்றாண்டு விழா எடுக்கும் காத்ரெஜின் மிகப் பெரிய சாதனையாக எதைக் கருதுகிறீர்கள்?’’**

‘‘உழைப்பின் உயர்வைத்தான்! நாம் அடிமைப்பட்டிருந்த காலத்திலேயே, நமது பொருளாதாரத்தை உயர்த்த வேண்டும் என அயராது உழைத்தவர் என் பெரியப்பா ஆதீஷிர். அவர் விதைத்தவற்றை உரமிட்டு வளர்த்தவர் தந்தை பிரோஜ்ஷா. தீர்க்க தரிசனத்துடன் திட்டமிட்டு செயல்பட்டால் அதில் வெற்றி அடையலாம் என உணர்த்தியதுதான் காத்ரெஜின் சாதனை! காந்திஜி போன்ற மகாத்மாவின் பாராட்டையும் ஆசியையும் பெற்றது அதைவிடப் பெரிய சாதனை! பிரிட்டிஷாரை யாரும் பகைக்கத் துணியாத காலத்திலேயே, காந்திஜியின் ஹரிஜன முன்னேற்றத் திட்டத்துக்கு 3 லட்சம் (இன்றைக்கு 6 கோடி) நன்கொடையளித்தவர் என் பெரியப்பா! அந்தத் துணிச்சலுக்கும், தாராள மனசுக்கும் இன்றும் நான் தலைவணங்குகிறேன்!’’

**‘‘உங்கள் கணிப்பில், ஒரு ‘லட்சியத் தொழிலதிபர்’ யார்?’’**

‘‘உழைப்பவர் உயர, மனித நேயத்துடன் செயல்படுபவர்தான். தான், தன் மக்கள், தன் சுற்றம் என்ற குறுகிய வட்டத்துள் உழலாமல், நம் நாடு, நம் மக்கள், நம் முன்னேற்றம் என எண்ணுபவனே உண்மையான முதலாளி! பொருளை ஆதாரமாகக் கொண்டு முன்னேற வேண்டுமேயன்றி பொருளாதாரத்தின் அடிப்படையில் மனிதர்களை எடை போடக்கூடாது. சின்ன வயதிலிருந்தே ‘ஏழைக்கு இரங்கு’ மந்திரத்தை உபதேசித்து, சமத்துவத்தை வலியுறுத்தி, எங்கள் தொழிலாளர் நல திட்டங்களுக்கு வழிவகுத்தார் என் தந்தை. இன்று, அதே பசிஃபிக்கின் ஸ்பான்சர்ஷிப்பில், வெளிநாடு செல்ல இருக்கும் எங்கள் ‘உதயாசல் பள்ளி’ மாணவர் இருவரில், ஒருவர் மானேஜ்மெண்ட் ஸ்டாஃபின் பிள்ளை, மற்றவர் சாதாரணத் தொழிலாளியின் மகன். இந்த பாரபட்சமற்ற முன்னேற்றம்தான், ஒரு தொழிலதிபரின் உண்மையான வெற்றிக்கு அளவுகோல்!’’

**‘‘இளமையிலேயே தொழில் துறை உங்களை ஈர்த்ததா?’’**

‘‘மஹூம்! கலை, காவியம், ஜர்னலிசம், பாலே போன்றவற்றில்தான் நாட்டம்! அண்டை அயலில், வம்பு விசாரிக்கும் பார்ஸிப் பெண்களுக்கெல்லாம், நான் செய்தி சேகரித்து ஒலிபரப்பிய நேர்த்தியைக் கண்டு, எனக்கு ‘‘சிப்போர்ட்டர்’’ என்ற புனைபெயரே சூட்டி விட்டார்கள். ஆனால் அப்பா கண்டிப்பானவர்! நான் ஆர்ட்ஸ், ஸயன்ஸ் இரண்டையும் படிக்கிறேன் என்று கெஞ்சினேன்; மறுத்து விட்டார்! விஸ்வேஸ்வரய்யாவின் புத்தகத்தை எல்லாம் படிக்கச் சொல்லி, ‘‘தொழில் வளர்ச்சியினால்தான் ஒரு நாடு முன்னேற முடியும்’’ என்ற கருத்தை என் மனத்தில் ஆழப் பதிய வைத்தார். வீட்டுக்கு மூத்தவன் என்பதால் இணங்கினேன்! இன்றளவும் ஒடிசியையும், பரதத்தையும், கதகளியையும் வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் ரசிக்கிறேன். உலகிலேயே, கலை, கலாசாரம் போன்றவை பிறந்த நாடுகளான இந்தியா, சீனா, கிரேக்கம், எகிப்து போன்ற நாடுகளை மட்டும்தானே ‘தாய்நாடு’ என்கிறோம்? தாயின் பெருமையை மறக்க முடியுமா?’’

**‘‘தாயை மறக்க முடியாமல் தவித்தது பற்றி...’’**

‘‘எட்டு வயதில் தாயை இழப்பது பெரிய கொடுமை! எங்களுக்கும் (இரண்டு தம்பி– ஒரு தங்கை) அப்பாவுக்குமிடையே பாலமாக இருந்த அம்மாவின் மறைவு என்னைப் பெரிதும் பாதித்தது. தாய்வழிப் பாட்டிதான் எங்களை வளர்த்தார். சிற்றன்னையின் நினைவே அவருக்கு சிம்ம சொப்பனம்! இருந்தாலும் 38 வயதில் என் தந்தை தனிமையில் வாடியதைப் பொறுக்காமல், அவரிடம் மெதுவாக மறுமணம் பற்றிப் பேச்சுக் கொடுத்தேன். அவர் கண்கள் முதல் முறையாகப் பனித்ததைக் கண்டேன்– ‘என் வாழ்வில் மற்றொரு

எண்களுக்கேற்ப லீவர்கள் பொருத்தப்பட்டு, சாவித் துவாரம் அமைக்கப்படுகிறது.

உருக்கிய அலுமினியம் அல்லது பித்தளையை தேவையான வடிவங்களில் (மோல்டுகளில்) ஊற்றி, காஸ்டிங் செய்யப்படுகிறது. மெஷினே ஃபைலிங், பாலிஷிங், வெல்டிங், நம்பரிங் எல்லாம் செய்து, கோத்ரெஜ் லீவையும் பதித்துத் தந்துவிடுகிறது. ஸ்ப்ரிங் இல்லாத லீவர்களில் முன், பின், மேல், கீழ், என இந்தத் தகடுகளை மனிதர்கள் பொறுத்தி, இப்படி அப்படி தட்டி, ஃபினிஷிங் டச்சஸ் கொடுத்து விடுகிறார்கள்.

பெண்ணுக்கு இடமில்லை' என்று சொல்லி விட்டார்.''

**''நீங்களும் அதே முடிவை ஏன் எடுத்தீர்கள்?''**

''நான் திருமணமே செய்து கொள்ளாததைச் சொல்கிறீர்களா? உண்மையில் என் வாழ்க்கையில் நிறைய பெண்கள்(சிரிப்பு...) ஆனால் யாரையும் காதலித்து, கல்யாணம் செய்து கொள்ள எனக்கு நேரமில்லை! என் அப்பா, இருக்கும் பணத்தை எல்லாம் விக்ரோலி நிலத்தில் போட்டு, தொழிற்சாலைக் கனவுகளில் கடன் வேறு வாங்கியிருந்தாரா? அவரது தீர்க்க தரிசனத்தைப் புரிந்து கொள்ளாதவர்கள், 'உன் அப்பா உங்களை நடுத் தெருவில் நிறுத்தப் போகிறார்' என்று சொல்லியே ஒரு கிலியை ஏற்படுத்தி விட்டனர். குடும்பத்தை ஸ்திரப்படுத்துவதிலும், தொழிலைக் கவனிப்பதிலுமே நான் தீவிரமாயிருந்து விட்டேன். 'டிஸிப்ளினேரியனான' என் தந்தை, என்னை ஊர் சுற்ற விடாவிட்டாலும், உலகம் சுற்ற நிறையவே அனுமதித்தார்.''

**''அண்டார்டிகா உட்பட 160 நாடுகளைப் பார்த்திருக்கிறீர்களாமே? உங்கள் நினைவில் நின்றவை.. கவர்ந்தவை...?''**

''எல்லாமே வித்தியாசமான அனுபவங்கள். இந்தோனேஷியக் கரையில் ஒரு ஊர் – இங்கேயுள்ள பழங்குடி மக்கள், சர்ச்சுக்குப் போகும்போது மட்டுமே ஆடை அணிவார்கள்! அண்டார்டிகா அனுபவம் அலாதி! வேறொரு கிரகத்தில் கால் வைத்தது போலிருந்தது! ஆள் அட்ரஸே கிடையாது; மனிதனைப் போல் உலவும் பென்குவின்கள்தாம்! வேற்று கிரகங்களுக்கும் செல்ல ஆசைதான்! ஆனால் பிராப்திக்கவில்லை! எனினும் நிலவில் கால் வைத்து மீண்ட அன்றே ஆர்ம்ஸ்ட்ராங்குடன் உணவருந்திய அற்புத அனுபவம் கிட்டியிருக்கிறது. கவர்ந்த நாடு... ஜப்பான் தான்; விஞ்ஞான பூர்வ உழைப்பால்... Scientific managementஆல் உயர்ந்தவர்கள்.''

**''Scientific managementஎன்றால்...? நீங்கள் கடைப்பிடிக்கிறீர்களா?''**

''சுருங்கச் சொல்வதென்றால் 'செய்வன திருந்தச் செய்வது' தான் Scientific management. இதை எல்லோருமே கடைப்பிடித்தால்தான் சுபிட்சமேற்படும்!''

**''நமது அரசில் தொழில் துறைத் திட்டங்கள் திருப்திகரமாக இருக்கின்றனவா?''**

''நேரு குடும்பம் நாட்டுக்கென்று தியாகங்கள் செய்திருக்கின்றனர். ஆனால், நேருவின் சோஷலிசக் கொள்கைகள், இந்திராகாந்தியின் "Dynasty rule" ஆல் உருப்பெறவில்லை! இன்றைய திட்டங்கள், பணக்காரர்களை அதிக பணக்காரர்களாகவும், ஏழைகளை அதிக ஏழைகளாக்கவும்தான் உதவுகின்றன.''

**''50 ஆண்டுகளில் நாம் முன்னேறியிருக்கிறோமோ...?''**

''சில துறைகளில் முன்னேற்றமிருக்கிறது; ஆனால் போதுமானதாக அல்ல; நாம் பின் தங்கியிருப்பதற்கு மூல காரணம் மூட நம்பிக்கை, சாதி, மதம், 'ஏன்' என்ற கேள்வி கேட்காமலே எதையும் ஏற்கும் மடமை, பெண்களின் முன்னேற்றமின்மை... இத்யாதி. நான் தத்துவத்தை நம்புகிறேன், மதத்தையல்ல. உழைப்பை நம்புகிறேன், அதிர்ஷ்டத்தையல்ல!''

**''பொன்விழா ஆண்டில், நாடு முன்னேற ஏதேனும் ஒரு துறையைத் தேர்ந்தெடுத்து உழைப்பதென்றால், உங்கள் 'சாய்ஸ்' எதுவாக இருக்கும்?''**

''நிச்சயமாக கு.க.தான்! ஆனால் கு.கு(குறுகிய குடும்பம்) அல்ல! ஒரே குழந்தை என்றிருந்தால், சீனாவைப் போல், செல்லம் கொடுத்தே அவர்களைக் குட்டிச் சுவராக்கி விடுவோம். கூடவே சுயநலப் பெற்றோரின் வானளாவிய எதிர்பார்ப்புகள் வேறு. கூட்டுக் குடும்பங்கள் நலிந்து வருகையில், குடும்பத்திற்கு இரண்டு குழந்தைகள் என்பதுதான் ஆரோக்கியமான இலக்கு! கு.க. விஷயத்தில் நான் காட்டிய தீவிரம், எனக்கு F.P. காத்ரெஜ் என்ற புனை பெயரை வாங்கித் தந்திருக்கிறது'' (சிரிக்கிறார்).

கடைசியாக... ஒரு துண்டு கறுப்புத் துணியை (patch-work போல்) சின்ன பித்தளைப் 'பின்'னால் சட்டையின் தோள் பகுதியில் செருகியிருப்பதை சந்தேகக் கண் கொண்டு நாம் பார்த்ததைக் கண்டு கொண்டு, ''என்ன இது என்கிறீர்களா? இந்தியாவுக்கு கஷ்டகாலம் என்றால் இந்தக் கறுப்பு பாட்ஜ் அணிவேன். சந்திர சுவாமி தந்திரம், நரசிம்மராவ் நாடகம், லல்லுவின் தில்லுமுல்லு என்று வரிசையாக வந்து கொண்டிருக்கின்றனவே.. எப்போதாவது, அரிதாக ஒரு நல்ல விஷயம் நடந்தால், குஜ்ரால் பிரதமராக நியமனம், லியாண்டர் பேஸின் வெற்றி... அன்று வெள்ளை பாட்ஜ் அணிந்து கொள்வேன்'' என்றார்.

• எஸ்.பி. காத்ரேஜ்

இவர்கள் கையில் மட்டுமல்ல, வாயிலும் 'நல்தால்' தொங்கியது; அனாவசியமாக ஒரு பேச்சு இல்லை!

அடுத்து, 'கப்போர்டுகள்' உற்பத்தியாகும் தொழிற் கூடம்.

இந்தியக் கலாசாரத்துடன், குடும்பத்துடன், கல்யாணத்துடன் ஐக்கியமாகிவிட்ட 'செண்டிமெண்டல்' சாதனமாயிற்றே இது?

வரிசையான பெரிய டாங்குகள். ஸ்டீல் ஷீட்டுகள், முதலில், பெரிய ஸல்ஃப்யூரிக் ஆஸிட் 'பாத்'களில், ''ஸ்டீம் ஹீட்'' செய்யப்



''வழக்கு ஆவணங்களை எல்லாம் தமிழில் தர வேண்டும்னு மனு கொடுத் துட்டு... அப்புறம் என்ன செய்யப் போறீங்க?''

''தமிழ் படிக்க கத்துக்கப் போறேன்!''

— பழங்கூர் மீரா. முருகன்

படும். வெந்நீரால் கழுவப்பட்டபின், மீண்டும் 'ஹைட்ராக்ஸைட்' குளியல்; மீண்டும் சுத்த மாக்கப்பட்டபின், பாஸ்ஃபேட் நிரம்பிய டாங்குகளில் முக்கி எடுக்கப்பட்டால் துருப் பிடிக்காமலிருக்க, பாதுகாப்பு கோட்டிங் கிடைத்துவிடும்!

அடுத்து, பக்கங்கள், பின்புறம் உள் ஷெல்ஃபுகள், கதவுகள் எனத் தேவையான அளவில் வடிவமைக்கப்பட்டு, படிப்படியாகப் பொருத்தப்படுகின்றன. கன்வேயரில் வரிசை யாக இவை அணிவகுத்துச் சென்ற வண்ண மிருக்கின்றன. கடைசியில் பெயிண்டிங்– எலெக்ட்ரிக் ஸ்ப்ரேயிங்தான்! நமக்கு அறிமுக மான பச்சை, ஸ்டீல் க்ரே தவிர, நீலம், மஞ்சள் கலர்களும் அங்கே இருந்தன.

ஒருமுறை இதன் அதிபர் ஃபிரோஜ்ஷா, தூரத்திலிருந்தே, கோத்ரெஜ் பீரோக்கள் வண்டிகளில் ஏற்றப்படுவதை பார்த்துக் கொண்டிருந்தாராம். ஏதோ ஒரு பீரோ இவர் கண்ணை உறுத்த, சம்பந்தப்பட்ட தொழி லாளியையும், ஸூபர்வைசரையும் அழைத்து, "செக் செய்தீர்களா?" என, "ஓ" என்று இரு வரும் பலமாகத் தலையை ஆட்டியிருக் கிறார்கள். உடனே இவர் ஒரு பத்து ரூபாய் நோட்டை உருவி, மூடியிருந்த அதன் கதவு களுக்கிடையே நுழைக்க, அதுவும் உள்ளே சென்றதாம். உடனே கோபப்பட்டு, அந்த பீரோவை சரி செய்யச் சொன்னாராம். நாமும் கையில் அகப்பட்ட ரூபாய் நோட்டை உள்ளே நுழைக்கப்பார்க்க... ஊஹூம்.. காற்று கூட நுழையாது என்றார் அங்கே வேலை செய்த தொழிலாளி.

1956ல், முதல் தேர்தலின்போது, 17 லட்சம் ஓட்டுப் பெட்டிகள் (விலை ஐந்து ரூபாய்) இங்கேயிருந்துதான் நாடுமுழுதும் பயணமா யினவாம்!

ஸ்டீல் ஃபர்னிசர்களின் புகழ் வெகு வாகப்பரவி, ''வெளிநாடுகளிலிருந்து அரசு இறக்குமதிப்பதை நிறுத்தச் சொல்வோம்'' என மேனேஜர் கேட்டதற்கு "கூடாது; தொழிலில் போட்டி இருந்தால்தான், தரம் இருக்கும்'' என மறுத்துவிட்டாராம் ஃபிரோஜ்ஷா!

மாதிரிக்கு இரண்டு தொழிற் கூடங் களைப் பார்த்து விட்டு, மற்ற பிளாண்டுகளை யும், ஆராய்ச்சி நிலையத்தையும் அப்படியே ஒரு ரவுண்டு அடித்துவிட்டு, கோத்ரெஜின் தொழிலாளர் நல வாழ்வுத் திட்டங்களைக் காணச் சென்றோம்.

முதலில், உதயாசல் ஸ்கூல்; மாடல் பள்ளி. ஒரு கிளாசில், ஒரு டீச்சருக்கு 20-25 மாண வர்கள்தாம்! முதலாளி–தொழிலாளி இரு பாலரின் குழந்தைகளும் இணைந்தே பயில் கின்றனர். முதலிரண்டு குழந்தைகளுக்கு கல்வி இலவசம்; மூன்றாவதைப் பெற்றுக் கொண் டால், அட்மிஷனே நிச்சயமில்லை! தவிர மும்பையிலேயே ஒரு மானேஜ்மெண்ட் காலேஜும் கட்ட இருக்கிறார்கள்.

அடுத்து, சமூக நல சேவையின் மையமான 'பிரகதி கேந்திரா'– முதியோர் கல்வி, மகளிருக் கான கூடை பின்னுதல், பெயிண்ட், pottery, தையல் இத்யாதிகள் கற்றுத் தரப்பட்டு, கைவினைப் பொருள்கள் விற்பனையும் (எக்ஸிபிஷன் நடத்தி) செய்யப்படுகின்றன.

குடும்ப நலத்தில் கு.க.வுக்கு உச்ச ஸ்தானம். 'பே ஸ்லிப்'பில் கூட கு.க. வாசகங்கள்; வாசக் டெமி சென்டர்கள். தவிர பல் டாக்டர், ஃபிஸியோதெரபிஸ்ட், ஸைக்கியாட்ரிஸ்ட் போன்றோர்; யோகா, ஜிம்னாசியம், 'ஃபிட் னஸு'க்கு! மற்றும் ப்ரீச்காண்டி ஆசுபத் திரியில் ஏழை எளியவர்களின் இலவச சிகிச்சைக்கு ஒரு 'விங்'; தில்லியில் ஒரு டி.பி. ஆசுபத்திரியும் உள்ளதாம்.

சுற்றுப்புற சூழலின் மகத்துவத்தை உணர்த்த, இகபானா, போன்சாய் மற்றும் மரம் செடி வளர்ப்பு போன்றவை நேச்சர் கிளப்புகளின் உபயம்!

மேலும், அரசு, தொழில் சட்டங்கள் இயற்றுவதற்கு பல்லாண்டு முன்பே, முழு சம் பளத்துடன் விடுமுறை, பி.எஃப், கிராஜுவிடி, குடியிருப்பு வசதிகள் போன்றவற்றை செய்து தந்திருக்கிறார் ஃபிரோஜ்ஷா.

இருந்தும்...1972ல் சிறு போராட்டம், 1979 நவ்ரோஜிக்கு கத்திக்குத்து... என்பன போன்ற அசம்பாவிதங்கள்– யூனியன் தலைவர் தத்தா சாமந்த் கிளப்பிவிட்ட வெறியாட்டங்கள் – சிறு திருஷ்டிப் பரிகாரங்கள்தாம். இன்றைய நிலையில் அனைத்தும் அடங்கி, சுமுகமான உறவுகளே நீடிக்கின்றன.

— ஜெயஸ்ரீராஜ்

**10 வது** ஆண்டு சிறப்பு வெளியீடு

# தினமலர் தீபாவளி மலர் '97

ஒரு மெகா சூப்பர் பம்பர் பரிசு



வழங்குவோர்:
காளீஸ்வரி குரூப்பின் கோல்டு வின்னர்

ஒரு மெகா பம்பர் பரிசு



வழங்குவோர்:
திருச்சி வெக்காளியம்மன் ரியல் எஸ்டேட் குரூப்பின் பேஞ்ஜோ குளிர்பானம்

ஒரு மெகா பரிசு



வழங்குவோர்:
மில்கா வொண்டர் கேக்

இன்னொரு மெகா பரிசு



வழங்குவோர்:
ராம் காஷ்யப் நிறுவனம்

- ★ சியலோ கார் 1
- ★ டாடா சுமோ கார் 1
- ★ மாருதி 800 கார் 2
- ★ கைனடிக் சபாரி மொபட் 8
- ★ பஜாஜ் சன்னி ஜிப் மொபட் 6
- ★ வீடியோகான் சேலஞ்சர் கலர் டி.வி. 8
- ★ வீடியோகான் ரெப்ரிஜிரேட்டர் 8
- ★ வீடியோகான் வாஷிங்மெஷின் 8
- ★ ஹெச்.எம்.டி... கைக்கடிகாரங்கள் 200
- ★ தங்கநாணயம் 108
- ★ சீலிங்பேன் 60
- ★ தலா 10 பவுனில் தங்க நகை செட் 3
- ★ வசந்த் மிக்ஸி 100
- ★ கோனிகா கேமரா 50
- ★ டிஸ்டிங் வெட்கிரைண்டர் 25
- ★ பட்டுப்புடவைகள் 225
- ★ எமர்ஜென்ஸி லைட் 50
- ★ பேமிலி பேக் 50

**விலை ரூ.55**

அதோடு சிங்கப்பூர் டூர் செல்ல ஒரு ஜோடிக்கு வாய்ப்பு

*Not Only amusing Amazing too...*

- ◆ 3 புத்தகம்
- ◆ 2 புளோ-அப்
- ◆ 8 சுவாமி படங்கள்
- ◆ கை நிறைய தரமான இலவச பொருட்கள்

**இத்துடன் உங்களில்**

# 934

**பேருக்கு ரூ.40 லட்சம் பரிசு**

தினமலர்

# தீபாவளி மலர் '97

சென்னையில் ☎ 8523715, 8523695 தொடர்பு கொள்ளவும்.



# ஒரு கன்னித்தாயின்

● யுகோஸ்லாவியாவில் உள்ள ஸ்கோப்ஜே என்ற ஊரில் அல்பேனியன் தம்பதியினருக்குப் பிறந்த மூன்று குழந்தைகளில் ஒரு பெண் குழந்தையின் பெயர் அக்னேஸ் கோங்ஸா பொஜாஹியு. (அன்னை தெரசா தான்!)

● அன்னைக்கு நான்கு வயதானபோது முதல் உலகப் போர் மூண்டது. மளிகைக் கடை நடத்தி வந்த தந்தையாரும் இறந்து போயிருந்ததால் அன்னையின் தாயார் குழந்தைகளை மிகவும் சிரமப்பட்டு வளர்த்தார்.

● முதல் உலகப் போரில் ஏற்பட்ட சேதங்களையும் மக்களின் துன்பங்களையும் பிறர் மூலம் கேள்விப்பட்ட அன்னையின் மனம் சேவையின் பக்கம் ஈர்க்கப்பட்டது. வங்காளத்தில் கிறிஸ்துவ சேவைக் குழுவினரின் பணி பற்றிக் கேள்விப்பட்டதும் அங்கு சென்று தாமும் சேவை செய்ய வேண்டும் என்கிற ஆசை வந்து விட்டது. இதனால் பள்ளிப் படிப்பை முடித்ததுமே பெண் துறவியர் மடத்தில் சேர்ந்து பயிற்சி பெற்றுப் பெண் துறவியானார். அவர் கனவு முழுவதும் 'இந்தியா... இந்தியா...' என்பதாகவே இருந்தது.

● கல்கத்தாவிலுள்ள என்டாலி எனும் இடத்தில் அமைந்துள்ள புனிதமேரி பள்ளியில் ஆசிரியையாகப் பணியாற்றவே வங்க மண்ணில் அடியெடுத்து வைத்தார் அன்னை.

● அன்னை பணியாற்றிய பள்ளியின் பசுமையான மைதானத்துக்கு வெளியே மோதிஜில் (ஏரிகளின் முத்து) என்னும் வறுமையான சேரிப் பகுதி. அவர்களின் வறுமையும் சுகாதாரமின்மையும் அன்னையைப் பாதித்தன. தமது அறையின் ஜன்னலிலிருந்து பார்க்கும்போது அந்தச் சேரிப் பகுதிதான் அன்னைக்குத் தெரியும் என்பதால் தாம் அனுபவிக்கும் ஒரு சராசரி வசதிகூட அன்னையின் மனத்தை உறுத்தியது. அதனால் துறவு வாழ்க்கை மட்டும் போதாது; நோய், ஏழைமை, அறியாமை, இவையெல்லாவற்றுக்கும் மேலாக ஆதரவற்ற நிலை ஆகியவற்றை எதிர்த்துப் போராடுவதே சரியான வழி என்பதை உணர ஆரம்பித்தார். அவ்வப்போது அந்தச் சேரிப் பகுதிக்குச் சில மாணவிகளோடு சென்று சேவை செய்ய ஆரம்பித்தார்.

● கல்கத்தாவிலிருந்து, இமயமலையின் கர்ஸியாங் பகுதியிலிருந்த தூய மேரி மடத்துக்கு அன்னை இரயிலில் பயணித்துக் கொண்டிருந்த போதுதான் இறைவன் தம்மோடு பேசியதாக உணர்ந்தார். தாம் ஏழைகளுக்காகப் பணியாற்றுவதே யேசுவின் விருப்பம் என்பதில் உறுதியானார்.



● தாம் இனி பள்ளிக்கு வெளியே பணிபுரிய விரும்புவதைப் பள்ளியின் மூத்த அன்னையிடம் தெரிவித்து அனுமதி பெற்று, ரோமிலிருந்தும் அனுமதி பெற்றுக் கொண்டு வெளியே வந்தார். அவர் வெளியே வந்தபோது தோளில் சிலுவை, கையில் பைபிள், ஐந்து ரூபாய்க்கும் குறைவான பணம். ஆனால் அளவற்ற நம்பிக்கையையும் கருணையையும் சுமந்து வந்தார்.

● பள்ளியை விட்டு வெளியேறிய அன்னை தனித்து நின்று சேவையைத் துவங்கிய இடம் அதே மோதிஜில் சேரிதான். முதலில் அந்தக் குழந்தைகளுக்கு எழுதப் படிக்கச் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார். கரும்பலகை வாங்கக் கூட வசதியில்லாததால் மெல்லிய குச்சி கொண்டு தரையிலேயே எழுதக் கற்றுக் கொடுக்கத் துவங்கினார்.

● அன்னையின் இந்தப் பணி சுற்று வட்டாரத்தில் பரவப் பரவ சிறிது சிறிதாகப் பிறரின் உதவிகள் கிடைக்க ஆரம்பித்தன. அன்று முளைத்த விதைதான் உலகத்தையே தமது கருணை நிழல் கொண்டு அரவணைக்கும் ஆலமரமாக வளர்ந்து நின்றது அன்னை தெரசாவாக!

*(அன்னை தெரசா/ எழுதியவர்கள்: லீலா மஜூம்தார், பச்சி கர்காரியா/ வெளியீடு: நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியா, புதுதில்லி-16/ விலை : ரூ.8.00)*

# கனவு!

ஒரு சிறுகதை போல, முதல் ஷாட்டில் கதையை ஆரம்பிக்கிறார் வஸந்த். ஆபீஸ் டூரில் கோவா போன கணவன் புத்திபிசகி அங்கே யாரோ ஒரு பெண்ணுடன் உல்லாசமாக இருந்ததை சமர்த்தாக வந்து மனைவியிடம் சொல்லி, மன்னிப்புக் கேட்கிறான். மனைவி, மூக்கைச் சிந்திக் கொண்டு அம்மா வீடு போய் விடுகிறாள்.

கதை இவர்களைச் சுற்றித்தான் என்று நினைத்தால், இல்லை என்கிறார்கள். கணவனின் தம்பி விஜயும் மனைவியின் தம்பி சூர்யாவும். 'பிரிவுக்கு உன் அண்ணன் தான் காரணம்; உன் அக்காதான் காரணம்' என்று இவர்கள் மோதிக் கொள்வதில் தொடங்குகிறது விஷயம். வஸந்த்தானா என்று ஆச்சர்யப்படும்விதமாக அவர்களின் மோதலில் அப்படியொரு அரை டிராயர் தனம், செயற்கைத்தனம். தவிரவும் அக்னி நட்சத்திரத்தின் அப்பட்டமான தழுவலில் நகரும் காட்சி அமைப்புகள்.

மனைவிக்கு மிகவும் இணக்கமானவனாகவும் (என்னதான் அடிக்கடி சண்டை போடுவதாகச் சொல்லிக் கொண்டாலும்) குழந்தைக்கு நல்ல தந்தையாகவும் தெய்வபக்திமிக்கவனாகவும் சாது சொரூபியாகவும் – எல்லாவற்றுக்கும் மேல் டிபிகல் மிடில் கிளாஸ் ஆசாமியாகவும் இருக்கிறவன், துணிந்து அப்படியொரு தவறு எப்படிச் செய்வான் என்பதிலேயே ஏகப்பட்ட சந்தேகம். இந்த சீட்டுக்கட்டு அடித்தளத்தின் மேல் இரண்டு தம்பிகள், பிரச்

# அபிமன்யு

நேர்மையான போலீஸ் அதிகாரியைப் பற்றிய இன்னொரு படம். ஆனால் 'இன்னொரு படம்' என்பதோடு மட்டும் நிறுத்திக்கொள்ள முடியாமல் இருப்பதற்கு முக்கியக் காரணம் அபிமன்யுவின் பாத்திர வார்ப்பு. வெறும் முரட்டுப் போலீஸாக மேலோட்டப் பார்வைக்கும் கூர்ந்து பார்த்தால் முரட்டுத்தனத்தின் மேல் கொஞ்சம் புத்திசாலித்தனம் பூசியிருக்கிறதும் தெரிகிறது. ஆனால் அந்த புத்திசாலித்தனத்தில் அத்தனை குரூரம் கலந்திருக்க வேண்டாம்! சட்டத்திலிருந்து தப்பிவிடக் கூடும் என்று அஞ்சுகிற குற்றவாளிகளையெல்லாம் நூதனமான முறைகளில் தாமே அழிக்கிறார் பார்த்திபன். (படத்தில் ஒரு வசனம் : "நான் காக்கிச் சட்டை போட்ட கிரிமினல்!")

பார்த்திபனின் ஆக்ஷன், நடிப்பு எல்லாமே போலீஸ் வேஷத்துக்குப் பொருந்தி வருகிறது. ஆனால் வசனங்களை மட்டும் ஏன் இப்படி ஏழாம் வாய்ப்பாடு போல ஒப்பிக்கிறார்? அதுவும் ஒவ்வொரு வசனமும் மைல் நீளத்துக்கு வேறு இருக்கிறதா? அவர் ஆரம்பித்து, நிறுத்துவதற்குள் ஒரு நடை எழுந்து போய் சாய் அடித்து விட்டு வந்துவிடலாம் போலிருக்கிறது!

வில்லன் ரகுவரன். வில்லத்தனத்தின் எல்லா விதங்களையும் அவரே முன்பு பலதரம் வெளிப்படுத்தி விட்டதாலோ என்னவோ இந்தப் படத்தில் புதுசாகச் செய்ய மிக மிக சிரமப்பட்டிருக்கிறார். சிற்சில குட்டி மேனரிஸங்களுக்கு தியேட்டரில் விஸில் கேட்கிறது.

இடைவேளைக்கு முன் வைக்கப்படும் சஸ்பென்ஸ் புருவம் தூக்க வைப்பதுதான் – முற்பாதியில் பார்த்திபனின் அம்மாவாகக் காட்டப்படும் கீதா எப்படி ரகுவரனின் மனைவியாகப் பின்னால் வருகிறார் என்று சிண்டு பிய்க்க வைக்கிறது தான். அது அம்மா இல்லை; அக்கா என்பதும் ஏற்கலாம்தான். ஆனால் எப்படி, எந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு கிரிமினலின் மனைவியானார் என்பதை ஒரு வரியிலாவது சொல்லியிருக்க வேண்டாமா? அதுவும் உறுத்தலேதும் இன்றி எட்டணா சைஸ் பொட்டு வைத்துக் கொண்டு அவனுடன் இணக்க





# நேருக்கு நேர்

னையின் வேர் பற்றி ஒருதரம் கூட யோசிக்காமல் பைக்கில் பறந்து பறந்து, அடித்துக் கொள்வது ஒட்டவேயில்லை.

மோதலின் இடையே டிரிங்ஸ் பிரேக் மாதிரி ஆளுக்கொரு ஹீரோயின் – அரை விநாடியில் உதித்து விடுகிற காதல். அடிக்கொரு பாட்டு – அந்தக் கால சிவகவி, ஹரிதாஸ் மாதிரி. கௌரவ நடிகைகள் மாதிரி வந்து காதல் பாடி விட்டு உடனே உடனே காணாமல் போய் விடுகிறார்கள் சிம்ரனும் கௌசல்யாவும்.

கௌசல்யாவை முதல் படத்தில் புடைவையில் பார்த்துவிட்டு, இதில் குட்டை டிரெஸ் டேபிள் டென்னிஸ்காரியாகப் பார்க்க என்னவோ போல் இருக்கிறது. தவிரவும் அவரது வளமான எதிர்காலம் மாடர்ன் டிரெஸ்ஸில் அல்ல; புடைவையில்தான் இருக்கிறது என்பதையும் தவறாமல் சொல்லி விடத் தோன்றுகிறது.

புதுமுகம் சூர்யா – சிவகுமார குமாரர். அசப்பில் மட்டுமல்ல; நடிப்பிலும் ஆரம்ப கால அப்பா மாதிரி தான் இருக்கிறார். (டான்ஸ் ஆசையை முளையிலேயே கிள்ளியெறிந்து விடுவது உத்தமம்.)

படத்தில், பிரகாஷ்ராஜ், ராஜேஷ் போன்ற விற்பன்னர்களையெல்லாம் ஓரிரு காட்சிகளில் வந்து போகச் செய்திருக்கிறார் வஸந்த். அநியாயம்!

இன்னொரு அநியாயம் கே. வி. ஆனந்த் செய்திருக்கிற காமெரா இருட்டடிப்பு. நிறைய காட்சிகள் நைட் எஃபெக்டில் வருவதாலா, அல்லது விளக்குகள் பற்றாக்குறையா தெரியவில்லை. நைட் லாம்ப் துணையுடன் எதையோ தேடுவது மாதிரி இருக்கிறது. படம் மூச் சூடும்.

வில்லன், பைக்சேஸ், சண்டைகள், சாதா பாடல்கள், துளி கூட ஒட்டாத காமெடி, வழக்கமான கிளைமேக்ஸ் என்று பரிபூரண கோடம்பாக்கத்தனத்துடன் ஒரு கரம் மசாலா தந்திருக்கிறார் 'நல்ல டைரக்டர்' வஸந்த்.

அவருக்கு சர்வ மங்களமும் உரித்தாகுக.

மாக வாழ எந்தச் சூழ்நிலையில் நேர்ந்தது என்கிற கேள்விக்கு பதிலே இல்லை!

ரொம்ப ஊலண்டாக ஓடும் திரைக்கதைக்குத் தேவையில்லாமல் ஒரு ஹீரோயின் டிராக். ரவளி ஏன் அப்படி நடுநடுவே வந்து பார்த்தி பனை மட்டுமின்றி, பார்ப்போரையும் இம்சை பண்ண வேண்டும்? ஹீரோயின் இருந்தே ஆக வேண்டும் என்கிற சாஸ்திரத்துக்காகவா?

சந்திரசேகர், விஜயகுமார் பாத்திரங்கள் பளிச் சென்று துலங்குகின்றன. ஒரு மாறுதலுக்கு இந்தப் படத்தில்தான் நீண்ட நாட்களுக்குப் பிறகு பல 'நல்ல' போலீஸ்காரர்களைப் பார்க்க முடிகிறது.

ஆனால், 'கருவிலேயே கடமை உணர்வைக் கற்ற' அபிமன்யு, தீயவர் யாரானாலும் அழிப்பதில் முன்நிற்பவர், வில்லனின் கைக்கூலியாக இருக்கிற தம் மேலதிகாரியை மட்டும் ஏன் கடைசி வரை விட்டு வைத்திருக்கிறார்? – என்றால், கதை நகர்வதற்காக என்று டைரக்டர் பதில் சொல்வாராயிருக்கும்.

படத்தில் துணிந்து நிறைய ஷாட்களை பிளாக் அண்ட் ஒயிட்டில் பிடித்திருக்கிறார் ஒளிப்பதிவாளர் பன்னீர்செல்வம். (பிளாஷ் பாக் சம்பவங்கள்.) அது பெரிய விஷயமல்ல. ஆனால் கேமராவை நகர்த்துகிற வேகத்திலும் வைக்கிற ஆங்கிள்களிலும் கூட மறக்காமல் 'முற்கால'த்தனத்தைக் கொண்டு வந்து காட்டி இருப்பது விஷுவல் சாதனை.

– ஆர்.பி.ஆர்.

# சூர்யா: From பனியன் கம்பெனி To சினிமா கம்பெனி!

"இவனுக்கு சினிமா மேல ஆசையே கிடையாது. நான் ஷூட்டிங்குக்குப் போனாக் கூட, இவன் ஸ்பாட்டுக்கு அதிகம் வந்ததில்லை. எப்படியோ இவனும் நடிகனாயிட்டான்!"

வியப்பும் சந்தோஷமுமாகச் சொன்னார் சிவகுமார். 'நேருக்கு நேர்'ல் இரண்டு ஹீரோக்களில் சிவகுமாரின் மகன் சூர்யா ஒருவர்.

"சினிமா ஆசையே இல்லை என்பதை நம்ப கஷ்டமாக இருக்கிறதே சூர்யா?" என்று சூர்யாவிடம் கேட்டபோது,

"லயோலாவில் காமர்ஸ் படித்துவிட்டு பிஸினஸ் செய்ய நினைத்திருந்தேன். ஓர் அனுபவத்துக்காக, திருப்பூரில் பனியன் பேக்டரி ஒன்றில் கொஞ்சநாள் வேலைகூடப் பார்த்தேன். பிறகு சென்னையில் ஒரு எக்ஸ்போர்ட் கார்மெண்ட் நிறுவனத்தில் உத்தியோகம். சொந்தமாக எக்ஸ்போர்ட் கம்பெனி தொடங்கி நடத்தத்தான் நினைத்திருந்தேன். எப்படியோ சினிமா என்னை இழுத்து விட்டது!"

"எப்படி?"

"பாரதிராஜாவே முன்பு ஒருதரம் என்னை நடிக்கிறியான்னு கேட்டிருக்கார். அப்ப ஆர்வமில்லை. மறுத்துட்டேன். இப்ப வஸந்த் கேட்டபோது ஏனோ மறுக்க முடியலை. ஆனாலும், 'எனக்கு நடிக்கவோ, டான்ஸ் ஆடவோ தெரியாது'ன்னு முதல்லேயே சொல்லிட்டேன். 'பரவாயில்லை, நான் பார்த்துக்கறேன்'னு சொல்லிதான் அழைச்சுக்கிட்டார்!"

"உங்க ரோலில் முதல்ல அஜித் நடிக்கறதா இருந்தது, நீக்கிட்டாங்க, தெரியுமில்லையா? அது பற்றி எதாச்சும் வருத்தம்...?"

"சேச்சே! பழைய விஷயம் பற்றி எனக்கு எதும் தெரியாது. என்னைக் கேட்டப்போ, அந்த கேரக்டர் பிடிச்சிருந்ததால் ஒப்புக் கொண்டேன். தட்ஸ் ஆல்! முதல் ஷெட்யூலில் பெரும்பாலும் லாங் ஷாட்டாகவே வைத்தார்கள். அதனால் சிரமமாக இல்லை, நடிப்பதற்கு!"

"ஹீரோயினுடன் நெருங்க சங்கடப்பட்டீர்களா? உங்களைப் பார்த்தாலே பால்வடிகிறதே என்பதால் இதைக் கேட்கத் தோன்றுகிறது...."

(சிரித்தபடி) "அப்படியொன்றுமில்லை. டைரக்டர் சொன்னதைச் செய்தேன். அவ்வளவுதான். என் கவலையெல்லாம் நிறைய டேக் வாங்காமல் இருக்க வேண்டுமே



“பாரதிராஜாவே முன்பு ஒருதரம் என்னை நடிக்கிறியான்னு கேட்டிருக்கார். அப்ப ஆர்வமில்லை. மறுத்துட்டேன். இப்ப வஸந்த் கேட்டபோது ஏனோ மறுக்க முடியலை.”




**ஆகஸ்ட் 15, 1947 அன்று பிறந்தவர்களுக்கு வெள்ளிப் பதக்கம் பரிசு அறிவித்திருந்தோம் இல்லையா? தேர்வான 17 பேருக்கும் கல்கியின் காவல் தெய்வமான விநாயகர் உருவம் பொறித்த வெள்ளிப் பதக்கங்கள் தபால் மூலம் அனுப்பப்பட்டுவிட்டன! —ஆர்**

என்பதுதான்!"

"விஜய் எப்படி?"

"ஓ. வெரிநைஸ். சீனியர் என்றாலும் துளி பந்தா இல்லாமல் நன்றாகப் பழகினார். ஒரு சண்டைக் காட்சியில் நான் விட்ட குத்து, தவறுதலாய் அவர் முகத்தில் பலமாகப் பட்டுவிட, மூக்கிலிருந்து ரத்தம் கொட்டியது! ஆனாலும் அதை சீரியஸா எடுத்துக்காமல், மருந்து போட்டுட்டு, உடனே நடிக்க வந்துட்டார்!"

"அது இருக்கட்டும். முதல் முதல்ல உங்களை ஸ்கிரீனில் நீங்களே பார்த்தபோது எப்படி இருந்தது?"

"நான் ப்ரீ-வியூ கூட முழுசாகப் பார்க்கவில்லை. படம் ரிலீஸானபின் தியேட்டரில்தான் மக்களுடன் உட்கார்ந்து பார்த்தேன்! அப்பா! நம்பவே முடியலை! அது நான்தானா! பயங்கர சந்தோஷம்!"

"இனி முழுநேர நடிகர்தானா?"

"வேறு வழி? 'காதலே நிம்மதி' படத்துக்கு சிவசக்தி பாண்டியன் என்னை புக் பண்ணியிருக்கிறார். பெரிய விஷயம் - பாலசந்தர் அட்வான்ஸ் கொடுத்திருக்கிறார். ஆனாலும் ஒரே சமயத்தில் பல படங்கள் ஒப்புக் கொள்ள நான் தயாராக இல்லை!"

"படம் பார்த்தவர்கள் என்ன சொன்னார்கள்?"

"நான் எதிர்பார்த்ததற்கு மேலே நீ நன்றாக நடித்திருக்கிறாய் என்று மணிரத்னம் பாராட்டினார். 'நீ இவ்ளோ திறமையான நடிகனாடா?' என்று அம்மா வியந்தார். சந்தோஷமா இருக்கு."

"ரசிகர்கள் தரப்பிலிருந்து?"

"ஓ... பத்திரிகைகளில் ஸ்டில் வெளியானவுடனேயே கடிதங்கள் வர ஆரம்பிச்சாச்சு. அப்பா மாதிரி நல்ல பேர் வாங்கணும், பிரபுதேவா மாதிரி நல்லா டான்ஸ் கத்துக்கங்க, நேச்சுரலா நடிங்க... இப்படி ஒரே அட்வைஸ் + வாழ்த்து மயம்தான்!"

**— எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படம், படம் : **யோகா**



1997 செப்டெம்பர் 21
ஈசுவர புரட்டாசி 5
மலர் : 56
இதழ் : 8

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பி.ஜே.பிக்குச் சோதனை!

பாரதத்துக்கே தலைகுனிவை ஏற்படுத்திய நிகழ்ச்சி, 1992 டிசம்பர் 6 அன்று நடந்தது. அந்த நிகழ்ச்சியை (பப்ரி மஸ்ஜித் தகர்ப்பு) விசாரிக்க அமைக்கப்பட்ட பிரத்யேக நீதிமன்றம், இன்று - சுமார் ஐந்தாண்டுகளுக்குப் பிறகு - குற்றப் பத்திரிகையை ஏற்க முடிவு செய்துள்ளது.

சிவசேனைத் தலைவர் பால்தாக்கரே, பி.ஜே.பி. தலைவர்கள் அத்வானி, ஜோஷி, கல்யாண் சிங், உமா பாரதி, உள்பட 49 பேர் மீது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்ய சி.பி.ஐக்கு அனுமதி தரப்பட்டிருக்கிறது. இந்த 49 பேரும் பப்ரி மஸ்ஜித் தகர்ப்புக்குத் திட்டமிட்டு ஏற்பாடு செய்தார்கள் என்று கிரிமினல் குற்றம்சாட்ட, நம்பத்தகுந்த ஆதாரங்கள் இருப்பதாக நீதிமன்றம் ஏற்றிருக்கிறது.

வழக்கு பதிவாகி, நடைபெற்று, தீர்ப்பு வழங்கப்பட நீண்ட காலமாகலாம். ஆனால், அதற்கிடையே பாரதீய ஜனதா கட்சியின் கௌரவமும் நம்பகத்தன்மையும் கடுமையான பரிசோதனைக்குள்ளாகும் என்பதில் சந்தேகமேயில்லை.

முதல் கட்டமாக, உத்தர பிரதேசத்தில் அடுத்த ஆறு மாத காலத்துக்கு முதல்வராகப் பொறுப்பேற்கும் விளிம்பில் இருக்கிற கல்யாண் சிங்கின் நிலைமை மிக மோசமாகி




யிருக்கிறது. உட்கட்சிப் பூசலால் ஒரு பக்கம் அவதி, மாயாவதியின் மிரட்டலால் இன்னொரு பக்கம் குழப்பம் என்று சிக்கிக் கொண்டிருந்தவருக்கு, இப்போது மூன்றாவது தரப்பிலிருந்து நெருக்கடி. பப்ரி மஸ்ஜித் தாக்குதலுக்குப் பிறகு, உ.பி.யில் ஏற்கெனவே இறங்குமுகமாகியிருந்த பி.ஜே.பி.யின் செல்வாக்கு இப்போது மேலும் சரியும்!

கிரிமினல் குற்றம்சாட்டப் பெற்றவர்கள் தேர்தலில் நிற்க அனுமதிக்கப்படக்கூடாது என்கிற சுதந்தரப் பொன்விழா ஆண்டின் தீர்மானத்தை இருகரம் நீட்டி வரவேற்றது பாரதீய ஜனதா கட்சி! அதன் தலைவர்களே இன்று இந்த நெருக்கடியில் மாட்டிக் கொண்டிருப்பது ஒரு வலுவான படிப்பினை. பி.ஜே.பி.யை சம்மட்டியாகத் தாக்குகின்றது நீதிமன்றத்தின் முடிவு. வழக்கு, விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படும்போது மேலும் பல கசையடிகள் பி.ஜே.பியின் பேரில் விழக்கூடும். அந்தக் கட்சி பலவீனப்பட்டுப் போக, காங்கிரஸின் கை உயரும்... காங்கிரஸின் ஆதரவை நம்பித்தான் ஐக்கிய முன்னணி ஆட்சி நடக்கிறது என்பது தெரிந்ததே. பி.ஜே.பியின் 'இமேஜ்' பாதிப்புக்குக் காத்திருந்து, கேசரி காய்களை நகர்த்தலாம். அதைத் தொடர்ந்து வருகிற தேர்தல் காங்கிரஸுக்குச் சாதகமாக முடியலாம்.

ஐக்கிய முன்னணியின் ஸ்திரமின்மையும், பி.ஜே.பியின் பேரிலுள்ள கரும்புள்ளிகளும் மக்களை மீண்டும் காங்கிரஸின் பக்கம் திருப்பிவிடலாம்.

ஆனால், காங்கிரஸுக்குச் சாதகமாக அமையும் இந்த நிகழ்வுகள், நாட்டு நலனுக்குச் சாதகமாக இருக்கப் போவதில்லை. ஊழலில் உளுத்துப் போய், வெறும் மேல் பூச்சில் பளபளக்கும் ஒரு கட்சியின் கைக்கு நாட்டின் ஒட்டுமொத்த பொறுப்பு போய்ச் சேருவது மிக துரதிர்ஷ்டமான நிகழ்வாக அமையும்.




ஓரளவு கட்டுக்கோப்பும் நடுநிலையான பொருளாதாரக் கொள்கையும் உடைய கட்சி பி.ஜே.பி. மத்தியில் நிலையான ஆட்சி அமைக்க இன்னமும் ஒரு வாய்ப்புப் பெறாத கட்சி. பப்ரி மஸ்ஜித் வழக்கு நடந்து முடிவதற்குள் அந்த வாய்ப்பு தரப்படாமலே கட்சியின் வலிமை குன்றிப் போகலாம். இதைத் தவிர்க்க வேண்டுமானால், உணர்வுகளைத் தூண்டி, சுலபமாக வோட்டுப் பெறும் 'ஹிந்துத்வ' குறுக்கு வழிப் பாதையை இனியேனும் அக் கட்சி கைவிட வேண்டும்.

அவ்வாறு செய்தால் 'மதச்சார்புடைய கட்சி' என்கிற குற்றச்சாட்டிலிருந்து விடுபட்டு அரசியல் ரீதியாக மேலும் வலுப்பெறலாம்; சிறுபான்மையினரின் அச்சத்தைப் போக்கலாம்; மதச்சார்பின்மையில் உண்மையான ஈடுபாடு கொண்ட அமைதி விரும்பிகளான பெரும்பான்மை இந்தியர்களின் ஆதரவையும் பெறலாம்.

சமயப் புரட்சிக்கும் ஆன்மிகப் புரட்சிக்கும் வித்திட்டு, அதன் மூலம் தேச விடுதலைக்கும் வழிகோலிய விவேகானந்தர் போன்ற பெரியோர்கள், மதச்சார்பின்மையை வலியுறுத்திய நாடு இது. எல்லா மதங்களையும் சமநோக்குடன் ஏற்பதே மெய்யான மதச்சார்பின்மை என்கிற உயர்ந்த விளக்கத்தையும் அவர்கள் நமக்கு அளித்துச் சென்றுள்ளனர்.

ஹிந்துத்வா என்கிற சொற்பிரயோகமே இந்த நோக்குக்கு விரோதமாயிருக்கும்போது, அதை மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதென்பது நன்மையைத் தரப்போவதில்லை.

வழக்கைச் சந்திக்கப் போகின்ற நிலையில், பி.ஜே.பி. இந்த உண்மையை உணர வேண்டும். சுயபரிசோதனைக்கான வாய்ப்பாக இந்த வழக்கைக் கருதி, புடம்போடப்பட்ட புதுக் கட்சியாக உருமாற வேண்டும்.



ஐந்து வருட இடைவெளிக்குப் பிறகு சென்னைக்கு வந்திருப்பதாகச் சொன்னார் மத்திய பாதுகாப்புத் துறை அமைச்சர் முலயம்சிங் யாதவ். முதல் நாள் மாலை மூன்றே கால் மணிக்கு ராணுவ விமானத்தில் வந்திறங்கியதிலிருந்து, மறுநாள் மூன்று மணிக்குக் கிளம்பும்வரை ஓடிக் கொண்டும், பறந்து



# ஆங்கிலம் பேசினால் அடி!

கொண்டும் இருந்தார். ராணுவத் தளபதியுடன் சந்திப்பு, கடலோர காவல் படையின் சாகசங்களை நடுக்கடலில் பார்வையிட்டது, சமாஜ் வாடி கட்சியின் தமிழ்நாடு பிரிவு (?!) நடத்திய வரவேற்பு நிகழ்ச்சி தவிர என்.வி.என். சோமு மகள் கல்யாணத்திலும் பங்கேற்றார் முலயம்.

பதினைந்து நிமிடம் பேட்டிக்கு நேரம் கேட்டபோது உதட்டைப் பிதுக்கினார் முலயம். அவருடன் பேசும்போது ஹிந்தி தவிர மற்ற மொழிகளுக்கு 144 போட்டு விட வேண்டும். ஆங்கிலத்தில் பேசத் துவங்கினால் அடித்தே விரட்டி விடுவார்! அதற்கு பதில் தமிழிலே பேசினாலும் அவருக்குப் புரியா விட்டாலும் தப்பித்துக் கொள்ளலாம்.

"இந்தியாவில் இந்திய மொழிகளுக்குத்தான் இடம் கொடுக்க வேண்டும். அந்நிய மொழியான ஆங்கிலத்தை ஏன் கட்டிக் கொண்டு அழ வேண்டும்?" என்றவர், "நான் நினைத்திருந்தால் பிரதமர் ஆகியிருக்க முடியும். இருந்தாலும் ஐக்கிய முன்னணியின் நன்மைக்காக நான் சமரசமாக நடந்து கொண்டேன். ஆனால் இப்போது என்னைப் பிரதமராக்க வேண்டும் என்று சொல்லக் கூடியவர்கள் எண்ணிக்கை அதிகமாகி வருகிறது" என்று ஜெர்மன் ஹாலில் நடந்த கட்சிக் கூட்டத்தில் பேசினார்.

கட்சி நிர்வாகிகளுக்கு ஹால் நிரம்பவில்லையே என்ற வருத்தம். இப்போது தமிழர்களின் பண்பாட்டுச் சின்னங்களாக மாறி வரும் ஆளுயர மாலையும், மலர்க்கிரீடமும் முலயமுக்கும் அணிவிக்கப்பட்டன. அவற்றுடன் ஸ்டைலாகப் போஸ் கொடுத்தார்.

கூட்டத்தில் கலந்து கொண்ட இளைஞர்கள் சிலர் அவ்வப்போது வெறித்தனமாக உற்சாகக் குரல்கள் எழுப்பியதுதான் ஏன் என்று புரியவில்லை!

— ஆரெஸ்வி

படம்: ஸ்ரீஹரி

"நம்ம தலைவர் பலே கில்லாடிப்பா!"

"எப்படிச் சொல்றே?"

"பஸ் கட்டணத்தை இப்படி அநியாயமா உயர்த்தியிருக்கீங்களேன்னு ஒரு நிருபர் கேட்டதுக்கு, அமெரிக்கா, ரஷ்யா போன்ற நாடுகளைவிட இங்கே குறைவுதாங்கறார்!"

- புளியரை கணேசன்



‘ரேடியோவின் மவுசு குறைந்து விட்டதா? ஆமாம்’ என்று வாதிடுகிறார் டெலி விஷன் ரசிகர் விஸ்வனாதன். ‘இல்லை’ என்பது ரேடியோ ரசிகை சாந்தியின் வாதம். மோதலின் தொகுப்பு :

**விஸ்வனாதன் :** இன்றைக்கு எல்லாரும் டெலிவிஷன்தான் பார்க்கிறார்கள். ரேடியோ கேட்க ஆளில்லை.

வீடுகளில் மட்டும்தானே?

**விஸ்வ :** தூர்தர்ஷன் மட்டுமென்ன? டிடி I, மெட்ரோ, டிடி. 3 என்று அதிலும்தான் எந்நேரமும் நிகழ்ச்சிகள். ரேடியோவை யார் கேட்கிறார்கள்?

வீரப்பன் கூட ரேடியோதான் கேக்கறான்!

# ரேடியோ மவுசு

**சாந்தி :** ரேடியோவை எல்லோரும் தான் கேட்கிறார்கள். வீரப்பன் கூட ரேடியோதான் கேட்கிறான். வெளியுலக நடப்புகளை அவன் தெரிந்து கொள்ளுவது ரேடியோ மூலமாகத்தான்.

**விஸ்வ :** நீங்கள் தினமும் ரேடியோ கேட்கிறீர்களா? டீ.வி. பார்க்கிறீர்களா? உங்கள் வீட்டு ரேடியோ ரிப்பேரானால் போரடிப்பதாய் உணர மாட்டீர்கள். ஆனால் டீ.வி. ரிப்பேர் என்றால், பொழுது நகருகிறதா? முதல் காரியமாய் டீ.வி. மெக்கானிக் ஒருவரைக் கூப்பிட்டுக் கொண்டு வந்து ரிப்பேர் பண்ணுகிறீர்களா இல்லையா?

**சாந்தி :** இன்றைக்கு டீ.வி. பாபுலரான மீடியம் என்று சொல்லுங்கள். ஒப்புக் கொள்ளுகிறேன். அதற்காக ரேடியோவுக்கு மவுசு குறைந்து போய்விட்டது என்று சொல்லாதீர்கள். இன்றைக்கு பெண்கள் விரும்பி அணிவது காட்டன் புடைவைகள்தான். அதற்காக பட்டுப் புடைவைகளுக்கு மவுசு இல்லை என்று ஆகிவிடுமா?

**விஸ்வனாதன் :** அப்படீன்னா! பட்டுப் புடைவையும், ரேடியோவும் ஒண்ணுதானா? இருபத்து நாலு மணி நேரமும், எந்தச் சானலைத் திருப்பினாலும் டீவியில ஏதாவது புரோகிராம் ஒளிபரப்பாகுது....

**சாந்தி :** அது கேபிள் கனெக்ஷன் இருக்கிற

**சாந்தி :** நம் ஊரில் இத்தனை டீ.வி. சானல்கள் வந்தது இப்போது சில வருடங்களாகத் தானே! அதற்கு முன்பே நூற்றுக் கணக்கான டீ.வி. சானல்கள் அமெரிக்காவில் இல்லையா? ஏன் பி.பி.சியை எடுத்துக் கொள்ளுங்கள்.

# அவுட்டா?

உங்க வீட்டுலேயே டி.வி. தானே அதிகம் பார்க்கப்படுது?

பி.பி.சி. டெலிவிஷன் ஒளிபரப்பை ஆரம்பித்தவுடன், ரேடியோ ஒலி பரப்பை நிறுத்திக் கொண்டு விட்டார்களா என்ன? இல்லையே! அது பாட்டுக்கு அது; இதுபாட்டுக்கு இது!

**விஸ்வ** : பி.பி.சியிலும் டெலிவிஷன் ஒளிபரப்புக்குத்தான் அதிக வரவேற்பே தவிர, ரேடியோ ஒலிபரப்புக்கு இல்லை. நம் ஊரிலும், சில பேர் வீட்டில், காலையில் ஒரு சில மணி நேரங்கள் ரேடியோ கேட்கிறார்கள். அவ்வளவுதான். மற்ற நேரமெல்லாம் டீ.வி.தான். டீ.வியே இல்லாமல் இருந்தால், மக்களிடையே ரேடியோ இன்னும் பிரபலமடைந்திருக்குமில்லையா?

**சாந்தி** : டீ.வியே இல்லாமல் இருந்திருந்தால் என்பதெல்லாம் கற்பனையான சூழ்நிலை.

**விஸ்வ** : கற்பனை தேவையில்லையா? பிராக்டிகல் நிலவரம் பற்றிப் பேசுவோம். இன்றைக்கு, மக்களைக் கவர்வது டெலிவிஷன் தானே! அதன் பாதிப்பு ரேடியோவுக்குத்தானே!

**சாந்தி** : நியூஸ் என்று எடுத்துக் கொண்டால், ரேடியோவில் எத்தனை முறை ஒலிபரப்பாகிறது?

**விஸ்வ** : ஆனாலும், டீ.வியில் பார்ப்பது போல ஆகுமா?

**சாந்தி** : கிரிக்கெட் மாட்ச் என்றால், இன்றைக்கும் ஆபீஸ்களிலும், வெளியிடங்களிலும் சிறு டிரான்சிஸ்டர்களை வைத்துக் கொண்டு காமன்டரி கேட்பவர்கள்தானே அதிகம் கண்ணில் படுகிறார்கள்?

**விஸ்வ** : அது சரிதான். ஆனால், ஆங்கிலம் அல்லது இந்தி தெரிந்த மக்கள் மட்டும்தானே ரேடியோவில் கமென்டரி கேட்டுப் புரிந்து கொள்ள முடியும்? ஆனால் டெலிவிஷன் அப்படியில்லையே! எத்தனை பாட்டிகள் மாட்ச் பார்க்கிறார்கள்?

**சாந்தி** : இந்திய பரப்பளவில், ரேடியோவுக்கு 87 சதவீத ஏரியாவில் நேயர்கள் இருக்கிறார்கள். ஆனால் டெலிவிஷனுக்கு 50 சதவீதம் கூட இல்லை என்று புள்ளி விவரம் கூறுகிறதே. ஆக ரேடியோவின் விஸ்தீரணத்துக்குள் டெலிவிஷனின் வீச்சும் அடங்கிப்போய்விடுகிறதல்லவா?

**விஸ்வ** : இல்லை. டெலிவிஷன் ஆதிக்கம் செலுத்துகிற 50 சதவீத ஏரியாவில் ரேடியோவுக்கு மவுசு போய்விட்டதே!

**சாந்தி** : மக்கள் தொகையில் எதற்கு எத்தனை சதவீதம் வீச்சு என்று கணக்கிட்டுப் பார்த்தாலும் ரேடியோவுக்கு 96% கவரேஜ் கிடைக்கிறதே! ஆனால் டெலிவிஷனுக்கு 72% கவரேஜ்தான்.

**விஸ்வ** : நீங்கள் சொல்லுகிற புள்ளி விவரம்



"உங்க வீட்டில் உள்ள அறைகளுக்கு வேலூர், திருச்சி, திஹார் என்று பத்து விதமான ஊர் பெயரை ஏன் வைத்தீர்கள்?"

"எந்தெந்த ஜெயிலில் இருந்தேனோ, அந்த ஜெயிலின் ஞாபகார்த்தமாகத்தான்!"

---

"ரிடையர் ஆனதும் என்ன செய்வதாக உத்தேசம்?"

"உண்மையிலேயே உழைச்சு சம்பாதிக்கணும்னு முடிவு செஞ்சிட்டேன்!"

— சரஸ்வதி தியாகராஜன்



கரெக்டாகவே இருக்கட்டும். என் பாயிண்ட் என்னவென்றால், டெலிவிஷன் பார்க்கிற 72% ஜனங்கள் மத்தியில், ரேடியோவுக்கு மவுசு குறைந்து விட்டது என்பதுதான்.

**சாந்தி** : விளம்பரங்கள் என்று எடுத்துக் கொண்டாலும், ரேடியோவில் எவ்வளவு விளம்பரங்கள் ஒலிபரப்பாகின்றன. மக்களிடையே மவுசு குறைந்து போய்விட்டது என்றால், எந்த உற்பத்தியாளரும், விற்பனையாளரும் ரேடியோவில் விளம்பரம் செய்ய மாட்டார்களே!

**விஸ்வ** : உங்கள் வாதம் சரியில்லை. விளம்பரங்களில், மல்டி மீடியா அட்டாக் என்று ஒரு ஸ்டிராடஜி உண்டு. டெலிவிஷன், சினிமா அரங்குகள், ரேடியோ, விளம்பர சுவரொட்டிகள், பிட்நோட்டீஸ் வரை எல்லாவற்றின் மூலமாகவும் திரும்பத் திரும்ப மக்களின் கவனத்தை ஒரு பொருளின் மீது ஈர்க்கிறபோது, நல்ல விளம்பரம் கிடைக்கும்.

**சாந்தி** : கிராமப்புறங்களுக்குப் போனால் இன்னும் ரேடியோ நிகழ்ச்சிகளுக்கு - குறிப்பாக செய்தி அறிக்கைகளுக்கு வரவேற்பு இருப்பதைக் கண்கூடாகக் காணலாம்.

**விஸ்வ** : கிராமத்தில் வேண்டுமானால் அப்படி இருக்கலாம். நகரங்களில் மக்கள் ரேடியோவை எப்போதோ ஓரங்கட்டி விட்டார்கள்.

**சாந்தி** : நகரங்களில் வீடுகளில் ரேடியோவுக்கு மவுசு இல்லை என்கிறீர்கள் இல்லையா? இப்போது என் கேள்விக்கு பதில் சொல்லுங்கள். உங்கள் வீட்டில் டீவி. இருக்கிறது என்பதற்காக, ரேடியோவைத் தூக்கி வெளியில் போட்டு விட்டீர்களா?

**விஸ்வ** : இல்லை. ரேடியோவும் எங்கள் வீட்டில் வைத்துக் கொண்டுதான் இருக்கிறோம்.

**சாந்தி** : அப்புறம் ரேடியோவுக்கு மதிப்பு இல்லை என்று எப்படிச் சொல்ல முடியும்?

**விஸ்வ** : இருபத்து நாலு மணிநேரத்தில் எங்கள் வீட்டு ரேடியோவில் ஒரு மணி நேரம் நிகழ்ச்சிகள் கேட்டால், டீவியில் புரோகிராம் பார்ப்பது நாலைந்து மணி நேரங்கள். இத்தனைக்கும் நானும், என் மனைவியும் வேலைக்குப் போகிறவர்கள். எது அதிகம் உபயோகப்படுத்தப்படுகிறது என்றுதானே பார்க்க வேண்டும்? உங்கள் வீட்டில் எது அதிக நேரம் உபயோகப்படுத்தப்படுகிறது? ரேடியோவா? டெலிவிஷனா?

**சாந்தி** : டெலிவிஷன்தான்.

**விஸ்வ** : அப்போது, நீங்களே என் கட்சிதான்!

**சாந்தி** : உங்கள் வீட்டையும், என் வீட்டையும் மனத்தில் வைத்துக் கொண்டு முடிவெடுக்கக் கூடாது.

**விஸ்வ** : கிராமப்புறங்களில் வேண்டுமானால் டெலிவிஷன் பார்க்க வசதியில்லாத மக்கள் நிறையப் பேர் இருப்பதால் ரேடியோ பாபுலராய் இருக்கலாம். ஆனால் சிறு நகரங்கள் முதல், மெட்ரோக்கள் வரை டெலிவிஷன்தான் பாபுலர். டெலிவிஷன் பாபுலாரிடி, ரேடியோவின் மவுசைக் குறைத்துத்தான் இருக்கிறது. இதில் எந்த விதமான சந்தேகமும் தேவையில்லை!

தொகுப்பு : **கௌதம்**
படங்கள் : **ஸ்ரீஹரி**

GURUDEV

# சுராணா



## ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்

(முந்தைய பெயர் S.U.S. ஃபைனான்ஷியர்ஸ் (இந்தியா) லிமிடெட்)

**Group of Surana**

1971 முதல்

## இரும்பு போன்ற உறுதி, தங்கம் போன்ற நாணயம் கொண்ட குழுமத்தின் ஒரு அங்கம்.

## சுராணா அளிக்கும் முதலீடு திட்டங்கள்

# ஆண்டுக்கு வட்டி விகிதம் 15%

**CARE**
மதிப்பீட்டாளர்களால்
"போதுமான பாதுகாப்பு"
சான்றிதழ் பெற்றது.
(B B B +)

சுராணா நிறுவனங்கள் 1971 முதல் இயங்கி வருபவை. 25 ஆண்டு அனுபவம் பெற்றவை.

சுராணா நிறுவனங்கள் இரும்பு உற்பத்தி, இரும்பு வியாபாரம் முதலிய தொழில்களில் ஈடுபட்டுள்ளன. இக்குழுமம் தென்னகத்தில் இரும்பு வியாபாரத்தில் முதலிடம் வகிக்கிறது.

குழுமத்தின் மொத்த விற்பனை அளவு 1996-97-ல் ரூ.175 கோடி.

சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட் (SFCIL), ஹையர் பர்ச்சேஸ், லீசிங், பில் டிஸ்கௌண்டிங், ஃபாரின் எக்ஸ்சேஞ், பப்ளிக் டிபாசிட் போன்ற பல வகைப்பட்ட நிதி நிர்வாகத்தில் ஈடுபட்டுள்ளது.

**SCHEME 1 - FIXED DEPOSITS**

| Period (Months) | Rate of Interest per annum |
|---|---|
| 12<br>24<br>36<br>48<br>60 | 15.00% (Monthly)<br>15.19% (Quarterly)*<br>15.48% (Half-yearly)* |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Minimum Amount of Deposit for Monthly Interest is Rs.10,000/-
* Interest at 15% Compounded at Monthly rests.

**SCHEME 2 - GURUDEV CERTIFICATE**
(Cumulative Deposit)

| Period (Months) | Minimum Amount (Rs.) | Maturity Value (Rs.) | Maturity Value for Rs. 1,000/- | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|---|
| 12 | 3,000 | 3,482 | 1,161 | 16.06 |
| 24 | 3,000 | 4,042 | 1,347 | 17.36 |
| 36 | 3,000 | 4,692 | 1,564 | 18.80 |
| 48 | 3,000 | 5,446 | 1,815 | 20.38 |
| 60 | 3,000 | 6,321 | 2,107 | 22.14 |

1. Minimum Amount of Deposit is Rs.3,000/-
2. Addition in Multiples of Rs.1,000/-
3. Interest at 15% Compounded at Monthly rests.

**SCHEME 3 - SURYODAY CERTIFICATE**
(Cumulative Deposit)

| Period (Months) | Principal (Rs.) | Maturity Value (Rs.) | Annual Yield% (Simple Interest) |
|---|---|---|---|
| 12 | 862 | 1,000 | 16.01 |
| 24 | 742 | 1,000 | 17.38 |
| 36 | 639 | 1,000 | 18.83 |
| 48 | 551 | 1,000 | 20.37 |
| 60 | 474 | 1,000 | 22.19 |

Interest at 15% Compounded at Monthly rests.

**சுராணா ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (இந்தியா) லிமிடெட்**

குரூப் ஆப் சுராணா
நெ. 16, ஒயிட்ஸ் சாலை, இரண்டாவது மாடி,
சென்னை - 600 014.
போன் : 8522595 / 8526581 / 8522753 / 8522684 / 8525396 / 8525694 / 8525596
ஃபாக்ஸ் : (044) - 8520587.

**கிளைகள் : திருச்சி:** 'TAB காம்ப்ளெக்ஸ்', முதல் தளம், 32-B, வில்லியம்ஸ் ரோடு, கன்டோன்மென்ட், திருச்சி-620 001. போன்: 461821; **கொள்ளிடம்:** 7/167, மெயின் ரோடு, கொள்ளிடம்-609 102. போன்: 77454; **சங்கரன்பந்தல்:** 3/10-A, மெயின் ரோடு, சங்கரன்பந்தல்-609 308. போன்: 85423, 85536; **பெங்களூர்:** 302, 3-வது தளம், ஸ்மிஸ் காம்ப்ளெக்ஸ், 33, செல்போர்ஸ் ரோடு, பெங்களூர்-660 001. போன்: 2281143; **எர்ணாகுளம்:** 2-வது தளம், பெப்பர்மின்ட் சதன், நெ-39/4232 எம்.ஜி. ரோடு, ரவிபுரம், எர்ணாகுளம், கொச்சின்-682 016. போன்: 374617; **கோயம்புத்தூர்:** முதல் தளம், ரெட்ரோஸ் டவர்ஸ், 424-A, டி.பி. ரோடு, ஆர்.எஸ். புரம், கோயம்புத்தூர். போன்: 471990 ஆகிய இடங்களில் உள்ளன.

29.9.96 தேதியிட்ட மக்கள் குரல், Trinity Mirror நாளிதழ்களில் வெளியான சட்டபூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி

ADWAVE/SFC/5420



• எலன்

# முன்னோடியாக

'சில்ரன்ஸ் கார்டன் ஸ்கூல்' இந்தப் பள்ளிக்கூடத்துக்கு இந்த ஆண்டு அறுபது வயது. சரி, இதில் என்ன அதிசயம்? ஆண்டொன்று போனால் வயதொன்று அதிகமாவதில் என்ன சுவாரசியம்?

இந்தப் பள்ளிக்கு சில தனிப் பெருமைகள் இருக்கத்தான் செய்கின்றன. சென்னை - ராதாகிருஷ்ணன் சாலையில் 'யெல்லோ பேஜஸ்' அருகில் ஒரு குறுகிய தெரு 'பளிச்' என்று கண்ணைக் கவரும். குப்பைகூளம் கிடையாது. தெருவின் கடைசியில் இருக்கும் இந்தப் பள்ளிதான் 'கின்டர் கார்டன்' என்ற சித்தாந்தத்தை இந்தியாவுக்கு அறிமுகம் செய்தது.

எலன் (ELLEN) என்றொரு ஜெர்மானியப் பெண்மணி குழந்தைகள் கல்வியில் பேரார்வம் கொண்டு புதுமையாக ஏதேனும் செய்ய வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்த வேளையில் அவர் சந்தித்தது வெங்கடேஷ் நாராயண சர்மாவை. இந்தியாவிலிருந்து போயிருந்த துடிப்புள்ள இளைஞர். கிட்டத்தட்ட ஒரே ரசனை.

நட்பு காதலாகி இருவரையும் இந்தியாவுக்குக் கொண்டு வந்தது. ஜெர்மன் மொழியில் கின்டர் என்றால் குழந்தைகள். ஜெர்மனியின் கின்டர் கார்டன் முறையை, இந்தியாவுக்கு ஏற்ற முறையில் மாற்றியமைத்து இங்கே அறிமுகப்படுத்தினர் எலன் தம்பதியினர். முதலில் ஏழு குழந்தைகள் மட்டுமே பள்ளியில் சேர்ந்தனர், 60 வருடங்களுக்கு முன்பு.

இந்த அறிமுகம் ஆலமரமாக வளர வேண்டும் என்ற கனவில் ஆலமரத்தடியில் ஏழு குழந்தைகள் படத்தையே தங்கள் பள்ளியின் சின்னமாக்கி வைத்தார்கள்.

கனவு நனவாகி இன்று சில்ரன்ஸ் கார்டன் பள்ளி ஆலமரமாகி விட்டது. ஏழு, நாலாயிரமாகி இருக்கிறது.

எலன் - சர்மாவின் மகள் சகுந்தலா சர்மா இப்போதைய தலைமையாசிரியை, தாளாளர்.

இந்திய - ஜெர்மனி நல்லுறவின் அடையாளம் அவர் உருவத்திலேயே தெரிகிறது. ஜெர்மானிய நிறத்துக்குள் இந்திய இதயம். அருவியாய் தமிழ் கொட்டுகிறது.

"உனக்கு நான் வீட்டில் ஆங்கிலம் தனியாகச் சொல்லிக் கொடுத்து விடுகிறேன். நீ தமிழ்தான் படிக்க வேண்டும் என்று அம்மா என்னை அப்போதே தமிழ் மீடியத்தில் சேர்த்தார்கள்!" என்கிறார் சகுந்தலா.

இந்தியா முழுவதும் இன்று கிட்டத்தட்ட பத்தாயிரம் பேருக்கு மேல் - கின்டர்கார்டன் ஆசிரிய ஆசிரியைகள் இந்த முன்னோடி பள்ளியில் பயிற்சி எடுத்தவர்கள்.

# ஒரு பள்ளி

**கா**து கேளாத, உடல் ஊன முற்ற, சற்றே மந்தமான மாணவ மாணவிகளை தனியாகப் பள்ளிக்கூடம் அமைத்து அதில் சேர்ப்பது சகுந்தலா சர்மாவுக்கு உடன்பாடில்லாத ஒன்று.

"எல்லோரையும் போல அவர்களையும் எங்கள் பள்ளிக் கூடத்தில் சேர்த்துக் கொள்கிறோம். கொஞ்சம் தனிக் கவனம் செலுத்தினால் போதும். சமூகத்தில் நாமும் ஓர் அங்கமே என்பதை அவர்கள் முழுமையாக உணர்ந்து மகிழ்வார்கள்."

கிட்டத்தட்ட ஐநூறு பேர் இங்கே அப்படி மகிழ்கிறார்கள்.

உடல் ஊனமுற்ற ஒரு சிறுமி மாடிப்படி ஏற முடியாமல் சிரமப் பட்டாள் என்பதற்காக அவள் படிப்பு முடியும்வரை அந்த வகுப்பையே மாடியிலிருந்து கீழ் தளத்துக்கு மாற்றி வைத்து அவளை வெற்றியடையச் செய்த மனிதாபிமானியாக சகுந்தலா சர்மாவைக் காண முடிகிறது.



• பள்ளி வகுப்பறையில்....

நன்கொடை வசூலிப்பதில்லை. காலையில் பிரேயர் கூட்டங்கள் முழுக்க முழுக்க மாணவிகளின் பொறுப்பு. அந்தப் பகுதி போக்குவரத்தையும் அவர்களே கட்டுப்படுத்துகிறார்கள். சுற்றுப்புறத் தூய்மை மாணவிகளின் ரத்தத்தில் ஊறிப் போயிருக்கிறது. பள்ளிக்கூட விழா என்றால் இறைவணக்கம் முதல் நன்றியுரை வரை எல்லாமே மாணவிகளின் செயல்பாடுதான். ஆசிரியைகள் பின்னிருந்து அவர்களை நகர்த்தி விட்டு மகிழ்கிறார்கள்.

ஏ.வி.எம். சரவணன் இப் பள்ளியின் முன்னாள் மாணவர். ஆர். வெங்கட்ராமனின் பிள்ளைகள் இங்கே படித்தவர்கள். நடிகைகள் ஸ்ரீவித்யா, மோகினியும் இங்கேதான்.

"மோகினி படிக்கும்போதே நடிக்க ஆரம்பித்து விட்டாள். உனக்கு நான் எவ்வளவு வேண்டுமானாலும் லீவ் தருகிறேன். ஷூட்டிங் போய் வா. ஆனால் பத்தாவது பரீட்சை எழுதியே ஆக வேண்டும்' என்று கட்டாயப் படுத்தி நான் அவளை பரீட்சை எழுத வைத்தேன்!" - சகுந்தலா நினைவு கூர்ந்தார்.



• சகுந்தலா சர்மா

கர்நாடக இசையில் கொடி கட்டிப் பறக்கும் பிரியா சகோதரிகள் படிப்பும் இங்கேதான். முதல் கச்சேரியும் பள்ளியில் மூலமாகத்தான்.

நீச்சல் வீராங்கனைகள் ஷண்முகவடிவு, கஜலட்சுமி இப்பள்ளியின் மேலும் பெருமைகள்.

திபேத்திய அகதிகளின் குழந்தைகள், நாகாலாந்து, பர்மா போன்ற இடங்களிலிருந்து வரும் குழந்தைகளையும் சில்ட்ரன்ஸ் கார்டன் தன் சிறகில் அணைத்துக் கொள்கிறது.

எவ்வப்போது எங்கிருந்து அகதிகள் வர நேரிடுகிறதோ அப்போதெல்லாம் அவர்களுக்கு கல்விக் கரம் நீட்ட இப்பள்ளி தயங்குவதில்லை.

முதன் முதல் ஒரு பள்ளிக் கூடத்தில் உடல் நல மையம் தொடங்கப்பட்டதும், ஆசிரியைகளின் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள 'கிரஷ்' எனப்படும் குழந்தைகள் காப்பகம் ஆரம்பிக்கப்பட்டதும் இங்கேதான்.

கிரஷ் நிர்வாகத்துக்கு இலக்கணமாய் விளங்கும் இப் பள்ளியில் அது பற்றி பலர் வந்து பயிற்சி பெற்றும் போகிறார்கள்.

மாணவிகள் மட்டுமல்ல, ஆசிரியைகளும் வகுப்பறையில் இருக்கும்போது காலணிகள் அணிவதில்லை, வெளியே நேர்த்தியாக அடுக்கி வைத்து - வெளியே போகும்போது அணிகிறார்கள். தலைமையாசிரியைக்கும் இதிலிருந்து விலக்கு இல்லை!

— ஆர்.எம்.

மூலம் : டேனியல் ஸ்டீல்

டாக்டர் ஹேமர்மேன் சொல்லியிருந்த படி காலை எட்டேகாலுக்கெல்லாம் ஆஸ்பத்திரிக்கு வந்து விட்டாள் பேஜ்.

ஆபரேஷன் செய்யலாம் என்பதற்கான பேப்பர்களில் கையெழுத்திட்ட பின்னர் ஆலிஸனைப் பார்க்கச் சென்றாள். இன்னும் அவள் கோமா நிலைமையிலேயே இருந்தாள். எல்லாக் கருவிகளும் மானிட்டர்களும் இயங்கிக் கொண்டிருந்தன.

அந்த நேரத்துக்கு ஐஸியு அறையில் விஸிட்டர்கள் யாரும் இல்லை. ஆலிஸனுடன் அவளைத் தனியே இருக்க விட்டு விட்டு நர்ஸ்கள் வெளியேறி விட்டார்கள். தங்கள் இடத்திலிருந்தபடியே அவர்கள் கம்ப்யூட்டர்கள் மூலமாயும் திரைகள் மூலமாயும் ஆலிஸனைக் கண்காணிக்க முடியும்.

ஆலிஸனின் கையைப் பிடித்துக் கொண்டு அவள் அருகிலேயே உட்கார்ந்திருந்தாள் பேஜ். அவளுக்குக் கேட்கிறதா இல்லையா என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் மெதுவே ஏதாவது பேசியவண்ணம், நடுநடுவே அவள் கன்னத்தை வருடியவண்ணம், குனிந்து முத்தமிட்டவண்ணம் இருந்தாள்.

ஒன்பதரை மணிக்கு ஆலிஸனை ஆபரேஷன் அறைக்கு அழைத்துப் போய் விட்டார்கள்.

"எட்டு அல்லது பத்து மணி நேரத்துக்கு ஆபரேஷன் நடக்கும்," என்று டாக்டர் ஹேமர்மேன் சொல்லியிருந்தார். ஆலிஸன் இந்த ஆபரேஷனில் பிழைத்தால்தான் உண்டு என்றும் திட்டமாகச் சொல்லி விட்டார்.

தன்னந்தனியே, தன் சிந்தனைகளுடன் போராடியபடி காத்திருந்தாள் பேஜ். ஆபரேஷன் அறையில் என்ன நடந்து கொண்டிருக்கும் என்பதை நினைத்துப் பார்க்கவே பயமாக இருந்தது. திடீரென்று நர்ஸ் வந்து, 'உங்கள் பெண் இறந்து விட்டாள்' என்று தெரிவிப்பாளோ? அதை எப்படித் தாங்கிக் கொள்ளப் போகிறோம்? அவளுக்கு உடம்பு நடுங்கியது.

ஆண்டியைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி விட்டு ஆஸ்பத்திரிக்கு வருவதாக பிராட் சொல்லியிருந்தான். சொன்னபடியே வந்தான்.

பேஜின் வெளிறிப் போன முகத்தைக் கண்டதும், "என்ன சொன்னார்கள்?" என்று கேட்டான்.

"புதிதாய் ஒன்றும் சொல்லவில்லை," என்றாள் அவள் மெதுவாக. பின்னர், "ஆபரேஷன் அறைக்கு அவளை எடுத்துக் கொண்டு போனபோது ஆலி என்ன அழகாக இருந்தாள்! அவளை எழுப்பிப் பேச வேண்டும் போல் என் மனசு துடித்தது. அவள் எழுந்திருக்கவில்லை," என்றபோது விழிகளில் கண்ணீர் முட்டித் தளும்பியது. அதை அவன்

# 11:29



'Accident' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம் © டேனியல் ஸ்டீல்

தமிழில் : ரா. கி. ரங்கராஜன்

பார்க்காவண்ணம் முகத்தைத் திருப்பிக் கொண்டான். தன் உணர்ச்சிகளை அவனிடம் காட்டிக் கொள்ள அவனுக்குப் பிடிக்கவில்லை. அவன் மீது வைத்திருந்த நம்பிக்கையும்; ஒளிவுமறைவு இல்லாமல் பழகிய அன்னியோன்னியமும் போயே போய் விட்டன. யாரோ அன்னியன் போல இருக்கும் இவரிடம் நமக்கென்ன பேச்சு என்பது போல வெறுத்துப் போயிருந்தது அவள் மனம். வாழ்க்கையில் ஒவ்வொருவர் எவ்வளவு எளிதாகக் கழன்று கொண்டு போய் விடுகிறார்கள்! ஒருசில நிமிடங்களுக்குள் எல்லாம் எப்படி மாறி விடுகின்றன!

பகல் பொழுது நீண்டு கொண்டே போயிற்று. அசௌகரியமான நாற்காலிகளில் உட்கார்ந்தபடியே நேரத்தைச் செலவழித்தார்கள் இருவரும். யார் யாரோ வருவதும் போவதுமாக இருந்தார்கள். பிராடும் பேஜும் பேசிக் கொள்ளவேயில்லை. எப்போதாவது ஆலிஸனைப் பற்றிய பழைய ஞாபகம் வரும். இரண்டு வார்த்தை பேசுவதற்குள் வேதனை ஏற்பட்டுப் பேஜ் நிறுத்தி விடுவாள்.

## 24

பிற்பகல் நாலு மணிக்கு இருவரும் சிற்றுண்டிச் சாலைக்குப் போய் உணவு அருந்தி விட்டுத் திரும்பினார்கள். தாரென்ஸன் எதிரில் வந்தான். 'எல்லாம் நல்லபடி ஆகும். கவலைப்படாதீர்கள்' என்று மட்டும் சொல்லிவிட்டுத் தன் மகள் க்ளோவைப் பார்க்கச் சென்று விட்டான்.

பேஜும் பிராடும் அந்தச் சிறிய வெயிட்டிங் அறையில், கடியாரத்தையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள், டாக்டரின் வருகைக்காக.

ஆறே கால் மணிக்கு, முடிவில்லாத டென்ஷனினால் இரண்டு பேருமே மயங்கி விழுந்து விடக்கூடிய நிலையில் இருந்தபோது, டாக்டர் வந்தார்.

குபீரென்று எழுந்த பிராட், 'எப்படி இருக்கிறான்?' என்று கேட்டான்.

''நாங்கள் எதிர்பார்த்ததை விடத் தேவலை,'' என்றார் டாக்டர்.

''அப்படியென்றால்?'' என்று மறுபடி



பிராட்தான் கேட்டான். பேஜ் எழுந்திருக்கவில்லை. நாற்காலியின் கைப்பிடிகளைப் பிடித்துக் கொண்டு இறுக்கமாக உட்கார்ந்திருந்தாள். எழுந்து நின்றால் தலை சுற்றி விழுந்து விடுவோம் என்று அவளுக்கு அச்சம்.

"ஆபரேஷனைத் தாக்குப் பிடித்திருக்கிறாள்," என்றார் டாக்டர். "ஆரம்பத்தில் எங்களுக்கு ரொம்பப் பயமாகத்தான் இருந்தது. மூளையில் இருந்த அழுத்தத்தை எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவு குறைத்திருக்கிறோம். இன்னும் சில வாரங்கள் கழித்துத்தான் சரியாகச் சொல்ல முடியும்...."

"சில வாரங்களா!" அதிர்ச்சியுடன் கூவினான் பிராட். "இப்படியே கோமாவில் இன்னும் சில வாரங்கள் இருப்பாள் என்றா சொல்கிறீர்கள்?"

"அதற்கு மேலும் கூட ஆகலாம். இப்படிப் பட்ட காயம் சரியாகப் பொறுமைதான் முக்கியம், மிஸ்டர் பிராட்," என்று அவனுக்குப் பதிலளித்துவிட்டு, பேஜை நோக்கி மெல்லிய முறுவலுடன், "உங்கள் பெண்ணுக்கு ரொம்பவும் மனோதிடம்," என்றார். "இன்னும் அபாய நிலைமையில்தான் இருக்கிறாள். ஆனால் மேலும் ஓரடி முன்னேறியிருக்கிறோம். மேலும் ஒருநாள் தாண்டியிருக்கிறோம். மேலும் ஒரு சோதனையை ஜெயித்திருக்கிறோம். அந்த அளவுக்கு ஆறுதல் கொள்ள வேண்டியதுதான். ஆனால் ஆபரேஷனின் பலன் எப்படி இருக்குமென்பது போகப் போகத்தான் தெரியும். இன்னும் ரொம்ப தூரம் போக வேண்டும்," என்றார் டாக்டர் ஹேமர்மேன்.

அவர் சொல்வதன் அர்த்தம் அங்கிருந்த எல்லாருக்குமே விளங்கியது. ஆலிஸன் எந்த வினாடியிலும் மோசம் பண்ணிவிடக்கூடிய நிலைமை...

"கொஞ்ச நேரத்தில் அவளை ரெகவரி அறைக்குக் கொண்டு போய் விட்டு விடுவார்கள். அங்கே யாருக்கும் அனுமதி கிடையாது. நீங்கள் வீட்டுக்குப் போய்க் கொஞ்சம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். ஏதாவது பிரச்னை ஏற்பட்டால் கூப்பிடுகிறோம்."

"பிரச்னை ஏற்படுமென்று நினைக்கிறீர்களா?" பேஜுக்குத் தொண்டை அடைத்தது.

சற்றுத் தயங்கிவிட்டு டாக்டர் சொன்னார்: "எதுவும் சொல்வதற்கில்லை. நான்கு நாட்களுக்குள் இரண்டாவது மேஜர் ஆபரேஷன் நடந்திருக்கிறது. முன்னைக் காட்டிலும் பலவீனமாக இருக்கிறாள். பார்க்கலாம். எல்லாம் நல்லபடி ஆகும் என்று நம்புவோம்."

நல்லபடி! நல்லபடி! நல்லபடி! அந்த வார்த்தையைக் கேட்டுக் கேட்டு வெறுத்து விட்டது பேஜுக்கு.

டாக்டர் போய் விட்டார். பிராட் ஒரு பெருமூச்சுடன் நாற்காலியில் விழுந்தான். இருவருமே கடலில் மூழ்கவிருந்து, மூச்சுத் திணறலுடன் பிழைத்து, கரையிலே கிடப்பவர்களைப் போலத் தோன்றினார்கள்.

"வீட்டுக்குப் போகலாமா?" என்றான் அவன்.

மறுத்துத் தலையசைத்தாள் பேஜ். "நான் இங்கேதான் இருக்கப் போகிறேன்."

"எதற்காக? எப்படியும் அவர்கள் உன்னை அனுமதிக்கப் போவதில்லை. ஏதாவது பிரச்னை ஏற்பட்டால் போன் செய்வதாகச் சொன்னார்களே?"

"இங்கே இருப்பதுதான் எனக்கு மனசுக்கு ஆறுதலாக இருக்கிறது," என்றாள் அவள் பிடிவாதமாக. தன் மனநிலையை வார்த்தைகளால் எப்படி விளக்குவதென்று அவளுக்குத் தெரியவில்லை. ஆண்டி எட்டாவது மாதத்திலேயே பிறந்து இன்குபேட்டரில் வைக்கப்பட்டிருந்த சமயம் இப்படித்தான் இருந்தது அவளுக்கு. குழந்தையை விட்டு இம்மியும் நகரப் பிடிக்கவில்லை. அதே போல்தான் இப்போதும். ரெகவரி அறைக்குள் அவளை அனுமதிக்கா விட்டால் பரவாயில்லை. ஆலிஸன் இருக்கும் இதே ஆஸ்பத்திரியில் எங்காவது ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தால் போதும்...

"ஆண்டி தனியே இருக்கிறான். நேற்று மாதிரி பயப்படுவான். நீங்கள் போங்கள்," என்றாள்.

பிராட் எழுந்து கொண்டான். "வேண்டுமென்றால் இருக்கிறேன்," என்றான் மீண்டும் ஒருமுறை.

"வேண்டாம்," என்றாள்.

காலையிலிருந்து அவனுடன் இருந்த நேரம் மொத்தமும் முள்ளின் மேல் உட்கார்ந்திருக்கிற மாதிரி இருந்தது அவளுக்கு. என்னென்னவோ சொல்ல வேண்டும்... என்னென்னவோ கேட்க வேண்டும்... எத்தனை நாளாக இந்தத் திருட்டுத்தனம் நடந்து கொண்டிருக்கிறது? ஏன் பொய் சொன்னீர்கள்? என்னிடம் என்ன குறை கண்டீர்கள்? என் மீது உங்களுக்குத் துளி கூடக் காதல் இல்லையா?

இப்படி எவ்வளவோ கேட்கலாம். கேட்டு என்ன ஆகப் போகிறது? இதயத்துக்குள்ளேயே எல்லாவற்றையும் அமுக்கிக் கொண்டு விட்டாள்.

"நாளைக் காலை கூப்பிடுகிறேன்," என்று சொல்லிவிட்டுப் பிராட் போய் விட்டான்.

அவன் போன பிறகுதான் ஞாபகம் வந்தது. ஒருமுறை கூட அவளை அவன் தொடவில்லை. போகும்போது முத்தமிட்டு விட்டுப் போகவில்லை... எல்லா பந்தங்களும் முறிந்தாயிற்று!

அந்த அறையில் ஒரு சிறிய பெஞ்ச் இருந்தது. அதில் முடங்கிப் படுத்துக் கொண்டாள்.

நடுவே ஒருமுறை தாரென்ஸன் தகூ மகன் பிஜானுடன் வந்தான். "தைரியமாக இரு," என்று சொல்லி விட்டுச் சென்றான்.

யாரும் இல்லாதபோது மனசில் சிறிது அமைதி ஏற்பட்டது. சில சமயம் யாரும் அனுதாபம் காட்டாமல் இருப்பதே பெரும் ஆறுதல். 'பாவம் ஆலிஸன்' என்று யாராவது சொன்னால் துக்கம் நெஞ்சைப் பிளக்கிறது.

கண்ணை மூடிக் கொண்டாள். எண்ணங்கள் அலைமோதின. பிராடும் தானும் எத்தனை சந்தோஷமாக இருந்தோம்... ஆலிஸன் பிறந்த போது எவ்வளவு மகிழ்ச்சி! குழந்தை என்ன அழகு!

ஆலிஸன் மறுபடி சின்னக் குழந்தையாக மாறி, அம்மா என்று கூப்பிட்டுக் கொண்டு, தளர்நடையில் அந்த அறைக்குள் வருவது போல...

"மிஸஸ் பிராட்?"

நர்ஸ் அவளை மெல்லத் தட்டினாள்.

எல்லாம் சொப்பனமா? இல்லை. நிஜமாகவே நர்ஸ் கூப்பிடுகிறாள். திடுக்கிட்டு எழுந்தவள், "என்ன ஆயிற்று?" என்று தடுமாறினாள்.

"உங்கள் பெண்ணுக்குக் கொஞ்சம் சிக்கல் ஏற்பட்டிருக்கிறது..."

"டாக்டர்? டாக்டரைக் கூப்பிட்டீர்களா?" பேதின் முகம் பிரேதம் போல வெளுத்தது.

"அவர் வந்து கொண்டிருக்கிறார். நீங்கள் வந்து ஆலிஸனைப் பார்ப்பதானால் பார்க்கலாம். என்னுடன் வாருங்கள்."

"அதாவது... அதாவது... உயிர் பிரிந்து கொண்டிருக்கிறது என்கிறீர்களா?"

ஒரு நிமிடத் தயக்கத்துக்குப் பின், "அப்படியில்லை... நாடித் துடிப்பு அடங்கிக் கொண்டிருக்கிறது... எதுவும் நேரலாம்..." என்றாள் நர்ஸ். டாக்டர் வருகிற வரையில் உயிர் நிற்குமா என்ற அவநம்பிக்கை அவள் முகத்தில் தெரிந்தது.

"என் கணவரைக் கூப்பிட வேண்டும்..."

"நாங்கள் கூப்பிடுகிறோம். டெலிபோன் நம்பர் தெரியும். நீங்கள் போங்கள்," என்றாள் நர்ஸ்.

இன்னொரு நர்ஸ் அவளை லிஃப்டில் அழைத்துச் சென்றாள்.

ஒரு நிமிடம் கூட வீணாக்க விரும்பவில்லை பேத். இந்த நிமிடம் போனால் இன்னொரு நிமிடம் வராது. 'போய் வா, கண்ணம்மா. போய் வா...' என்று ஆலிக்கு விடை கொடுத்து அனுப்ப வேண்டும். எத்தனை எத்தனையோ தூரத்துக்கு அவள் போயிருந்தாலும் சரி, அது அவளுக்குக் காதில் விழும்.

ரெகவரி அறைக்கு வெளியே அவளுக்கு அங்கியும் முகமூடியும் மாட்டியபின் உள்ளே அனுப்பினார்கள்.

தலை மொத்தமும் கட்டுப் போட்டு, கருவிகளும் ட்யூப்களும் சூழ்ந்திருக்க, படுத்திருந்தாள் ஆலிஸன். திடீரென்று அவள் மிகவும் சின்னவளாக ஆகிவிட்ட மாதிரி இருந்தது. இதற்கு முன் எப்போதும் காணப்படாத அமைதி அவள் முகத்தில் தவழ்வது போல இருந்தது.

ஒரு முக்காலி கொண்டு வந்தார்கள். அதில் உட்கார்ந்து, "ஆலி... என் கண்ணே..." என்று சொன்னபடி அவளுடைய விரல்களைப் பிடித்துக் கொண்டாள்.

விரலும் கையும் விறைத்துப் போயிருப்பது தெரிந்தது. மூளை பாதிக்கப்பட்டிருப்பதன் விளைவு அது என்று பேதுக்குப் புரிந்தது.

ஒரு நர்ஸ் அவளிடம் குனிந்து, "உங்கள் கணவரைப் போனில் கூப்பிட்டோம்," என்றாள்.

"வருவதாகச் சொன்னாரா?"

"இல்லை. உங்கள் பையனைத் தனியாய் விட்டு விட்டு வர முடியவில்லை என்றார்."

ஆலிஸனின் இந்தக் கடைசி வினாடிகளைக் கண்ணால் காணப் பிராடுக்குத் தைரியமில்லை என்று பேத் ஊகித்துக் கொண்டாள்.

ஆனால் அவளுக்குப் பயம் ஏற்படவில்லை. மனம் அமைதியாக இருந்தது. முன்னெப்போதையும் விட இப்போதுதான் மகளுடன் மிக மிக நெருக்கமாக இருக்கிறோம் என்று தோன்றியது. தாயும் மகளுமாக... ஆலி பிறந்தபோது இருந்த மாதிரி பிரிக்க முடியாத பந்தத்துடன்...

அர்த்தமுள்ள நிமிடம்... அந்த ஜனனமும் சரி, இந்த மரணமும் சரி, ஒருவகையில் ஒன்றுதான்... இதுதான் ஆரம்பம். இதுதான் முடிவு. ஒரு முழு வட்டம் வந்தாயிற்று. ஒரே ஒரு வித்தியாசம். இவ்வளவு சீக்கிரம் வட்டம் முடிவடையும் என்று நினைக்கவில்லை...

(தொடரும்)

**"நான் எழுதிய ஜோக் புத்தகம் படிச்சீங்களா.... எப்படி இருக்கு?"**

**"கடிக்க கடிக்க கடைசிவரை இன்பமா இருக்கு!"**

**— கு. அருணாசலம்**

### அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - ரூ. 1000/-

### ஆறுதல் பரிசு பெறும் கதை - 2

**நா**ன் அன்னிக்கு மூணாம்போப்பு படிச்சிட்டிருந்தன். அப்பத்தே கதிரேசனும் கந்தரேசனும் எங்கூருக்கு வந்தாங்க! கதிரேசனும் நானும் ஒரு சோடு! கந்தரேசன் பள்ளிக்கொடத்திலயே சேந்துல. மூணாம்போப்புல நாந்தா நல்லாப் படிப்பன். நாந்தா மொதலுமார்க்கு வாங்குவன். அப்ப மின்னாடி பலகைல எனக்குப் பக்கத்துல வஞ்சிமுத்து உக்காந்திருப்பான். அவங்கொஞ்சம் குண்டுங்கறதுனால எனக்குப் பகலைல எடங்காடா இருக்கும். அவ மட்டுங் கொஞ்சோ நெருக்கி உக்காந்தான்னா அந்தன்ன இந்தன்ல அசையவே முடியாது. அப்பத்தே கதிரேசன எங்க வோப்புல கொண்டு வந்து சேத்துனாங்க. எங்க வோப்புக்கு தங்கவேலு வாத்தியாரு தான் பேரெல்லாம் எடுப்பாரு!



# இனி என்னிக்கு அவனோட மொறை?



அவுருதான் வஞ்சிமுத்தான பின்னால பக லைக்கு போகச் சொல்லிட்டு கதிரேசன் என்ர பக்கத்துல உக்கார வெச்சாரு! கதிரேசன் வந்த புதுகல எனக்குப் புடிக்காது. எப்பவுமே அவன் உம்முனுதா இருப்பான். சிலேட்ட அழிக் கறதுக்கு தண்ணி கொஞ்சோங் கேட்டாக்கூட குடுக்க மாட்டான். நல்லா படிப்பான். வாத் தியாரு கேக்கற கேள்விகளுக்கெல்லாம் நாங் கதா எந்திரிச்க சொல்லுவம்.

அப்ப காப்பரிச்சை நடந்துது. அதுல கதிரே சந்தா மொத மார்க் வாங்குனான். நானு ரெண் டாவது மார்க்குதே வாங்குனேன். ஊட்டுக்கு வந்துதுமு அப்பாகிட்ட பயங்கரமான அடி! ஒடம்பெல்லா தடுப்பு தடுப்பா போட்ருச்சு! ரெண்டு மூனு நாளு பள்ளிக்கொடத்துக்கு போகவேயில்ல! அன்னிக்கு நான் அழுதன்! அன்னிக்கு என்னோட மொறை!

அப்பறமா கதிரேசனும் நானும் நல்ல சோடியாயிட்டோம். ஒருநாளு அவன் புத்த

**வெ. நிலாக்கதிர்**

(அறிமுக எழுத்தாளர்)



"நம்ம கட்சி உருப்பட போறதில்லைனு தலைவர் காரசாரமா அறிக்கை விட்டிருக்கார்."

"என்னாச்சு?"

"மாலை போடற சாக்கில் யாரோ தலைவரோட பாக்கெட்டில் இருந்த பணத்தை உருவிட்டாங்களாம்."

– பொள்ளாச்சி கே. சித்ரா



"பேனாவை எங்கேயோ வெச்சுட்டேன்...."

"தெர்மா மீட்டருக்கு பதிலா பேனாவை அவர் வாயிலே வெச்சிருக்கீங்க பாருங்க!"

— டி. என். பாலகிருஷ்ணன்

கத்துக்கு அட்டை போடறதுக்கு காக்கி அட்டை கொண்டு வந்துருந்தான். அவனுக்கு அட்டை போடவே தெரீல. நாந்தா வாங்கி அட்டை போட்டுக் குடுத்தேன். அப்பறமா தங்கவேலு வாத்தியாருகிட்ட புத்தகத்த கொண்டு போயி, பேரெழுதி வாங்கிட்டு வந்து குடுத்தேன். அதுக்கப்பறந்தே நானும் அவனும் படிக்கறதுல இருந்து, வெளையாடறதுல இருந்து, எப்பவுமே ஒட்டுக்காத்தே இருப்பம். தங்கவேலு வாத்தியாருதா அப்ப எங்குளுக்கெல்லா நல்ல வாத்தியாரு! கடசி பீரீடு எப்பவுமே அவுருதே! கடசி பீரிடு போயி வெளையாடறதுக்கு அவுருகிட்ட கேப்பம்! அவுருமே உட்ருவாரு! நாங்கெல்லா வெளையாடறதுக்கு பள்ளிக்கொடத் துக்கு கொஞ்சோந்தள்ளி சந்தப்பேட்டைக்குத்தே போகோனும். அங்க போயி கொஞ்சம்பேரு தொட்டி வெளையாட்டுக்கு போயிருவாங்க! கொஞ்சம் பேரு பஸ் ஓட்டிட்டு வெளையாடுவாங்க! நானு, கடைக்கார சின்னத்தொர, கதிரேசன் மூணு பேரும் மாத்தி மாத்தி ஒழவோட்டீட்டு வெளையாடுவம். ரெண்டு பேரு சோடியா நின்னு ஒருத்தனுது ஒரட்டாங்கையி, இன்னொருத்தனுது சோத்தாங்கையில கோத்துட்டு மூணாவது ஆளு கோத்த கைமேல ஒரு கால மடக்கி வெச்சு ரெண்டு பேருத்து தோள்லயும் கையப் போட்டுட்டு ஒரு கால நெலத்துல வெச்சுக்கோனும். இப்ப அவுங்க ரெண்டு பேரும் மின்னாடி நடந்து போகையில மூணாவது ஆளு காலு நெலத்துல ஒழவோட்டீட்டு வரும்.

நானும், கதிரேசனும் சின்னத் தொரையும் ஒழவோட்டீட்டு வெளையாட்டீட்டு இருந்தம். மொதல்ல கதிரேசன் ஒழவோட்ணான். அப்ப ஒரு கண்ணாடிச்சில்லு ஒன்னு கதிரேசன் கால்ல ஏறிருச்சு. அன்னிக்கு கால்ல அவனுக்கு பயங்கரமான ரத்தம். அவன் அழுஅழுன்னு அழுதான். அன்னிக்கு அவனோட மொறை!

அப்பவெல்லா நாங்க செல்வராசு தோட்டத்துல போயி கொம்பேறி வெளையாட்டு வெளையாடுவம். கடைக்கார சின்னத்தொரை, கதிரேசன், மாமரத்தூட்டு மயில்சாமி, டிரைவர் ஊட்டு சாமீப்பன், நானு எல்லாரும் வெடியால சோறுண்டதிமு ஒடனேயே வெளையாட போயிருவம். செல்வாந்தோட்டத்துல மேக்கால பொழில் அளவு வளத்தில வேப்பமரம் நாலஞ்சுமரம் இருக்கும். மரத்துக்கு கீழ ஒரு பெரிய வட்டம் இருக்கும். அவுட்டான ஆளு கீழ இருப்பான். மத்தவங்கெல்லா மரத்துமேல இருந்து எட்டிக்குதிக்கறமாதிரி மரத்துமேல ஏறி உக்காந்துக்குவாங்க! கீழ இன்னொருத்தனும் இருப்பான். ஒரு நாலுசாண் குச்சி ஒன்ன எடுத்து அவன் வட்டத்துக்குள்ள இருந்து ஒருகால மேலதூக்கி காலுக்கடியிலிருந்து வேகமா வீசுவான். வீசன ஒடனே அவனும் மரத்துமேல சீக்கிரமா ஏறிக்குவான். அவுட்டானவன் குச்சியை ஓடிப்போயி எடுத்துட்டு வந்து வட்டத்துக்குள்ள போட்டுட்டு மரத்துமேல இருக்கறவங்கள தொடறதுக்கு மரத்து மேல ஏறுவான். அதுக்குள்ள யாராவது ஒருத்தன் மரத்திலிருந்து குதிச்சு குச்சிய எடுத்துட்டா மறுபடியும் அவனேதான் அவுட்டு. யாராவது குதிச்சு குச்சிய எடுக்கறதுக்குள்ள மேல ஏறி எவனாச்சு தொட்டுட்டான்னா தொட்டவன் அவுட்டு.

அன்னிக்கு நாங்க வெளயாடீட்டு இருக்கறப்ப குச்சிய எடுக்கறதுக்காக நானு மரத்து மேல இருந்து குதிச்சன். அப்ப என்னோட பல்லு குதிச்ச வெரசல்ல மொழங்கால்ல பதுஞ்சு நத்தம் சும்மா கொடக்கொடன்னு வருது. என்னால தாங்க முடீல. எல்லாரும் மரத்துல இருந்து கீழ எறங்கி வந்துட்டாங்க. கதிரேசந்தா போயி சாணிப்பூட்டாந்தலைய புடுங்கீட்டு வந்து ரத்தம் வார எடத்துல

புளிஞ்சு உட்டான். ரொம்ப எரிஞ்சுது. தாங்க முடியாம அப்ப நானு அழுதுட்டடன். அன்னிக்கு என்னோட மொறை.

**லீ**வு நாள்ல ஒருநா நானு, கதிரேசன், செல்வராசு, சின்னத்தொரை எல்லாம் பட்டாம்பூச்சி புடிக்கறதுக்கு மாரியாத்தா கோயிலுக்கு பக்கமா போவம். கூடவே கதிரேசந்தம்பி சுந்தரேசனும் வந்திருந்தான். பட்டாம்பூச்சி புடிக்கறதுக்கு தும்பச்செடி நெறைய இருக்கும். நானும், கதிரேசனும் பட்டாம்பூச்சி புடிச்சு சுந்தரேசங்கிட்ட குடுப்பம். செல்வராசும், சின்னத் தொரையும் பட்டாம்பூச்சி புடிச்சு மயில்சாமிகிட்ட குடுப்பாங்க! எனக்கும் கதிரேசனுக்கும் நாலு ராணிப்பட்டாம்பூச்சி கெடச்சது. மூணு நாய்ப்பட்டாம்பூச்சி கெடச்சது. எல்லாத்தையும் தனித்தனியா நூல்ல கட்டி மாரியாத்தா கோயிலு செவுத்தோரமா சுந்தரேசன் உக்காந்திருப்பான். அவங்கிட்ட கொண்டு போயிக் குடுப்பம். மயில்சாமிகிட்ட சின்னத் தொரையானும், செல்வராசும் கொண்டு போயிக் குடுப்பாங்கோ! அவுங்களுக்கு அன்னிக்கு ராணிப் பட்டாம்பூச்சியே கெடைக்கல. நாய்ப்பட்டாம்பூச்சி நாலெண்ணங் கெடச்சுது. அவனுக ரெண்டு பேருமு எங்கட்ட "ஒரு ராணிப் பட்டாம்பூச்சி குடுடா நாங்க ரெண்டு பேரும் உங்களுக்கு ரெண்டு நாய்ப்பட்டாம்பூச்சி தாரோம்"ன்னாங்க! நாங்க மாட்டம்னு சொல்லிட்டோம். அதுனால எங்கமேல அவுனுகளுக்குப் பொறாம! நாங்க மறுபடி போயி பட்டாம்பூச்சிய அமுத்துலாம்னு போகைல "கள்ளங்கண்டுக்கோ. கதவச்சாத்திக்கோ"ன்னு சத்தம் போடுவாங்க. பட்டாம்பூச்சிக பறந்து போயிரும். அப்ப ஒரு இத்துப்போன வேலிமுள்ளு ஒன்னு கதிரேசங் கால்ல பொதக்குன்னு ஏறிருச்சு! ஐயோன்னு அலர்னான். நாந்தாம் போயி புடுங்கி உட்டன். அப்பிடியே அவங்கண்ணுல இருந்து தண்ணி வந்துட்டே இருந்துது. முள்ளுப் புடுங்குனப்ப பாதிமுள்ளு முறிஞ்சு போச்சு. அப்ப தண்ணிக்கே போன பாப்பாந்தோட்டத்து செல்லம் மக்காதே முள்ளுக் கௌஞ்சு உட்டுது. கத்தோகத்துன்னு கத்துனான். கண்ணுல தண்ணி சரசரன்னு வந்துது. அன்னிக்கு அவனோட மொறை!

**அ**ப்பறமா ஒருநாளு நானு, கதிரேசன், மயில்சாமி, சின்னத்தொரையான், எல்லோரும் பெரிய வாய்க்காலுக்குப் போனம். எங்கம்மா, கதிரேசனோட அம்மா எல்லாம் துணி தொவைக்கறதுக்காக வந்திருந்தாங்க! நாங்க நாலு பேரும் நீத்தலடிச்சிட்டு வெளையாடீட்டு இருந்தம். நானும் கதிரேசனுந்தே நல்லா டைவ் அடிப்பம். அப்ப நாங்க எல்லாரும் ஆறு முடிஞ்சு ஏழாம்போப்பு. சின்னத்தொரையானுக்கும், மயில்சாமிக்கும் அரகொற நீத்துத்தான்! அவனுக ரெண்டு பேரும் வாய்க்காலு ஓரத்திலியே நீத்தடிச்சுட்டு வந்து படீல ஏறிக்குவாங்க! அப்ப நானும் கதிரேசனும் ஷட்டர் மேல நின்னு டைவ் அடிச்சுட்டு இருந்தம். அப்பவே எங்கம்மாவும் அவங்கம்மாவும், "டேய்! டைவ்வு இவ்வு அடிச்சு எங்காச்சும் போயி முட்டிக்க போகுது" அப்பிடீன்னு சத்தம் போட்டாங்க! நாங்க அதையெல்லாங் கேக்கவே இல்ல!

அப்பத்தே கதிரேசன் டைவ் அடிக்கறதுக்கு ஷட்டர் மேல போயி நின்னான்! பெறகு குதிச்சான்! குதிக்கறப்போ காலு பின்னிருச்சு! தல கீழா வர்றப்ப ஷட்டருக்கு ஒட்டியிருக்கற பாலத்துக்கு தொடையடிச்சு வாய்க்காலு ஓரத்துல போயி தலைமுட்டிருச்சு! ஏதோ கத்துனான். நானு ஷட்டர் மேல போயி நின்னு அம்மாவ சத்தம் போட்டு கூப்புட்டன். வாய்க்காலோட நத்த நத்தமா போச்சு! அதுக்குள்ள மேக்குத் தோட்டத்து சின்ராசண்ணந்தே வந்து குதிச்சு அவன வெளீல எடுத்துட்டு வந்தாரு! தொடைக்கட்ட நல்ல வெட்டு! மண்டைல பயங்கரமான அடி! மயக்கமாயிட்டான். அதுக்குள்ள எங்கம்மாவும், கதிரேசனோட அம்மாவும் வந்துட்டாங்க! அழு அழுன்னு அழுகறாங்க! என்னாலயும் முடியல! நானும் அழுகறன். ஊட்டுக்கு விசியத்த சொல்லி கதிரேசனோட அப்பா வர்றதுக்குள்ள அவனோட உசிரு போயிருச்சு! நா அழுகறன்! யாருனாலயும் கட்டுப்படுத்த முடியாதளவுக்கு அழுகறன். அது என்னோட மொறை! இனி என்னிக்கு அவனோட மொறை?



**"என்ன கூட்டத்துல உள்ள எல்லோரும் தும்மல் போட்டுக்கிட்டே இருக்கிறாங்க?"**

**"நான் அப்பவே சொன்னேன்ல நம்ம தலைவர் பொடி வைச்சுத்தான் பேசுவார்னு!"**

**— நெல்லை எம். தங்கவேலு**

சலூரன்கள் முடிக்கிடக்கும்
செவ்வாய்க் கிழமைகளில் மட்டுமே
முடிவளர்ச்சி நினைவு வரும்.

அப்படியொரு செவ்வாய்க் கிழமையில்
அபூர்வமாகத் திறந்து வரவேற்றது
எம்.கே.எஸ். சலூரன்.

உலகில்
இரண்டே வாசனைப் பிரதேசங்கள்
ஒன்று - கோவில்
மற்றது - சலூரன்.

கோவில் வாசனைக்கு நம்பிக்கையும்
சலூரன் வாசனைக்கு ரோம மீறலும்
அவசியம்.

சலூரன் கண்ணாடிகள் முடிவற்றவை
ஒன்றில் மற்றது மற்றதில் இன்னொன்று
எனத்
தொடர் பிம்பங்களின் தாழ்வாரம்.

"ஆச்சு சார்"
குரல் தொடப் பரபரத்து
பிம்பங்களைத் தாண்டி நாற்காலி
திரும்பினேன்.

செயல்களில் இரண்டு
எப்போதும்
அதிருப்தியில் முடிபவை-
குளியலும் முடிதிருத்தமும்.

கண்ணாடியில்
அந்நியன்போல் தெரிந்த என்னை
நெகிழ்த்தியது
நாவிதரின் கரகரப்ப்ரியா.

"சங்கீதம் சுவாசம்
சவரக் கத்தி சாப்பாடு"

அந்தக் குரலில் விரிசல் இருந்தது.

"சங்கீதம்
பாட்டனுக்கு வேட்டியாயிருந்தது.
அப்பனுக்கு மேலாடையாயிருந்தது
எனக்கோ அங்கவஸ்திரம்."

கரகரப்ப்ரியா கரைந்தது காதில்
விடைபெற்ற பின்னும்
உதட்டில் ஒலித்தது.

செவ்வாய்க் கிழமையும்
திறந்தே இருப்பது
முத்துக் குமாரசாமி பாகவதர் சலூரன்

அதற்கப்புறம்
போகவில்லை - காரணம்
எனக்கும் தெரியவில்லை.



# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம்:**

இந்த வாரம் முழுக்க உணர்ச்சி வசப்பட்டு எதாச்சும் உளறிக்கிட்டே இருப்பீங்க. அதனால வீட்டுல பிரச்னை, சண்டை. மூஞ்சியைத் தூக்கி வெச்சிக்கிட்டு உம்முனு இருந்தா காரியம் நடக்காதுங்க. சும்மா ஜாலியா, ஈஸியா இருக்கப் பாருங்க. யாருக்கும் கடன் குடுக்காதீங்க. புதுசா எந்த முயற்சியும் இப்ப வேணாம். பெண்களுக்கு மட்டும் கொஞ்சம் பரவாயில்லை. வீட்டுக்காரங்களால அனுகூலமான சமாசாரங்கள் சிலது நடக்கும்.



**ரிஷபம்:**

போன வார ஜாலி இந்த வாரமும் தொடருதுங்க. எதிர்ப்பு இல்லாம, அடுத்தவங்க வயித்தெரிச்சல் இல்லாம ஹாயா முன்னேறலாம். ஆபீஸ்ல படியளக்கற பரந்தாமர்ங்களால நல்ல சகாயம் உண்டாகும். பாராட்டி, புகழ்ந்து, அபூரிதக் கரைசலாக்கிடுவாங்க. பிறகு இந்த ஸ்போர்ட்ஸ் சம்பந்தப்பட்ட துறைல இருக்கறவங்களுக்கு இந்த வாரம் பிரகாசமாக இருக்குது. ஏதாச்சும் மேட்ச் இருந்துச்சின்னா, சோண்டியா ஜெயிச்சுடுவீங்க. அதேமாதிரிதான் சினிமாக்காரங்களுக்கும். புதிய பட ஒப்பந்தங்கள் இப்ப கை கூடி வரும்.



**மிதுனம்:**

உத்யோக ரீதில சிலருக்கு டிரான்ஸ்ஃபர் வராப்பல இருக்குது. நல்ல மாறுதல்தான். யோசிக்காம ஒத்துக்கங்க. கூடப் பொறந்தவங்க, வரிஞ்சி கட்டிக்கிட்டு பண உதவி வேணுமான்னு கேட்டாக்க, ஆமாண்டான்னு சொல்லி ஒத்துக்கங்க. வாரக் கடைசில செலவு இருக்கும். ஆபீஸ்ல கொஞ்சம் இழுபறி நிலைமை இருக்கும். மேனேஜர் லீவ் தர மாட்டார். பதிலா லோடு லோடா ஃபைல் இருக்கும். பார்த்து செட்டில் பண்ண. ராத்தூக்கம் பத்தாது. உடம்பைப் பார்த்துக்கங்க.



**கடகம்:**

வெளியூர் - வெளிநாட்டிலிருந்து ஏதாச்சும் முக்கியமான செய்தி எதிர்பார்க்கறீங்களா? இந்த வாரம் வந்துரும். அதன் தொடர்ச்சியா உங்களுக்கு சில பயணங்கள் இருக்கலாம். சம்சாரம் மூலமா ஏதாச்சும் நல்ல சேதி காதுல உழும். ("என்னாங்க, ஒரு பட்டுப்புடைவை வாங்கியிருக்கேன், பத்தாயிரம்தான். பாக்கறீங்களா?") வழக்கு ஏதாச்சும் கோர்ட்லே நிலுவைல இருந்திச்சின்னா இப்ப கொஞ்சம் மேலும் தள்ளிப் போகும். பிரச்னை இல்லை. பின்னால சுமுகமாகவே தீர்ந்திடும். குழந்தைகளுக்கு மட்டும் கொஞ்சம் உடம்பு படுத்தலாம். பார்த்துக்கங்க.



**சிம்மம்:**

நீங்க ஒரு ராஜா மாதிரியும் ஊர்ல உலகத்துல இருக்கப்பட்டவனெல்லாம் உங்க சேவகருங்க மாதிரியும் இந்த வாரம் எல்லாரும் உங்களுக்கு உதவி செய்ய, வந்துட்டே இருப்பாங்க. என்ஜாய் பண்ணுங்க. வீட்டுல மட்டும் கொஞ்சம் நிலவரம் சரியில்லை. அபிப்பிராய பேதம் வந்து அம்மணிங்க கொஞ்சம் கோச்சிப்பாங்க. திங்கள் செவ்வாய்ல பண விஷயத்துல கொஞ்சம் ஜாக்கிரதையா இருக்கணும். நைசா பேசி டபாய்ச்சி எவனாச்சும் கடனாவோ லவுட்டிக்கிட்டோ பூடலாம். கவனம்!

**அக்னிசர்மா பக்கம்:**





**கன்னி:**

உங்க பிளஸ் பாயிண்ட் என்னன்னா, தெளிவான சிந்தனையும் சாதுர்யமான செயல்பாடும்தான்! இந்த ரெண்டும் இந்த வாரம் உங்களை ஓஹோன்னு வைக்கப் போவுது. கல்யாணத்துக்கு காத்துட்டிருக்கிற பொண்ணுங்களுக்கு இப்ப வரன் கை கூடும். கையில காசு நிறைய புழங்குதேன்னு தாம் தூம்னு இரைக்காதீங்க. கொஞ்சம் அடக்கி வாசிச்சாத்தான் நல்லது.



**துலாம்:**

உங்களுக்கு இப்ப ஆறுல சனி நிக்கறான். என்ன ஆவும்னா எதிர்ப்புங்கறதே இருக்காது! நீங்களே ராஜா! நேத்து வரைக்கும் இருந்த குழப்பமெல்லாம் டாட்டா சொல்லிட்டுப் போயிரும். உல்லாசமா இருக்க வேண்டிய சமயம் இது. பெண்களுக்கு புது நகைகள் வாங்கற யோகம் தெரியுது. (வீட்டுக்காரரை விடாதீங்க!) ஆனா ஒண்ணு. யாராச்சும் ரேஸ், லாட்டரின்னு இந்த வாரம் குறுக்கு வழில சம்பாதிக்க நெனச்சீங்களோ, தீந்துரும்! பாக்கெட்டைத் துடைச்சி, வழிச்சி எடுத்துரும். நேரம் அப்படி!



**விருச்சிகம்:**

கொஞ்சம் இழுபறியான டயம் சார்! எந்தக் காரியமும் தள்ளிட்டே போகும். மேலதிகாரிகள் பயங்கர ரப்சர் பண்ணுவாங்க. தவிர அலைச்சல் வேற ஜாஸ்தியா இருக்குது. பசங்ககூட டபுள் ஸ்ட்ரெயின் பண்ணிப் படிச்சாத்தான் தேற முடியும். கலைத்துறை ஆசாமிங்க புதுசா எதும் ஒப்பந்தம் போட வேணாம், இப்ப. அடுத்த வாரம் கொஞ்சம் நிலவரம் சீராகலாம். அப்ப பார்த்துக்கலாம்!



**தனுசு:**

செம குஷியான டயம் வந்திருச்சிங்க. உத்தியோக ரீதியிலேயும் சரி; குடும்பத்துலயும் சரி_ பிரச்னைங்கறதே இல்லாம சும்மா சர்வீஸ் பண்ணை டு விலராட்டம் லைஃப் பாருந்தா! ஓடும். நல்ல புகழ், பேரு, பணம் வந்து சேரப் போவுது. அதுக்கு மேல என்ன? பார்ட்டிகுலரா இந்த ராசிக்கார அரசியல்வாதிங்களுக்கு இப்ப டைம் நல்லா இருக்குது. பப்ளிக் சப்போர்ட் கிடைக்கும்.

**மகரம்:**



வழக்கமான பணிகள் குறைவில்லாம நடக்கும்னாலும் விசேஷமா ஒண்ணும் தெரியலை. யாராச்சும் சிபாரிசு கேட்டு வந்தா, மறுக்காம முடிஞ்சதை செய்ங்க. பின்னால, அவர்களால உங்களுக்கு ஆதாயம் கிடைக்கலாம். பெண்களுக்கும் மாணவர்களுக்கும் இது ரொம்ப சுமாரான வாரம்தான். வீண் வம்புகள்ல மாட்டிக்காதீங்க. திடீர் பிரயாணங்களைத் தவிர்க்க முடியாது. அதனால வரக் கூடிய அலைச்சல், செலவுகளையும்தான்!

**கும்பம்:**



விவேகம், விடா முயற்சி. இந்த ரெண்டையும் ஞாபகத்துல வெச்சிக்கிட்டு செயல்பட்டீங்கன்னா வெற்றி நிச்சயம். இந்த வாரம் அடிக்கடி உணர்ச்சி வசப்படுவீங்க. முதல் மூணு நாள் பரவாயில்லை. பின்னால இந்த குணத்தால நீங்களே உங்களுக்குச் சிக்கல் உண்டாக்கிப்பீங்க. பார்த்து நடந்துக்கங்க. அப்புறம் சாப்பாட்டு விஷயத்துல கவனம் தேவை. வெளியிடங்கள்ல சாப்பிடறதை இந்த வாரம் தவிர்க்கணும். ஏன்னா வயிறு சம்பந்தமான உபாதைகள் வரலாம்! எதிலும் பிடிப்பே இல்லாத மாதிரி ஒரு விரக்தி எப்பவும் இருக்கும். ஒதுக்கித் தள்ளிட்டு ஆக வேண்டியதைப் பாப்பீங்களா?

**மீனம்:**



அக்கம், பக்கத்துல இருக்கறவங்கள்ட்ட கொஞ்சம் சகஜமா பழகணும். உம்மணா மூஞ்சியாட்டமா இருந்தா எப்படி? உங்களுக்கு கிரக பலன் வேற சரியா இல்லை. ஏறுக்கு மாறா காரியங்கள் நடக்கும். அடுத்தவங்க ஹெல்ப் அவசியம் தேவைப்படும். அதனாலதான் சொல்றேன். பிறகு, இந்த வாரம் டூ வீலர்ல போகாதீங்க. சாலை விபத்துக்கு சான்ஸ் இருக்குது.

— செப்டெம்பர் 17 முதல் 23 வரை



# 24

மடுவில் முதலையிடம் மாட்டிக் கொண்ட யானை யோசித்தது. இப்படி நம் பந்துக்கள் எல்லாம் துக்கத்தில் அமிழ்ந்து அழுகின்றனவே. இது களைப் போய் நாம் ரக்ஷகர்கள் என்று எண்ணினோமே! பந்துக்களும் நம்மை ரக்ஷிக்க முடியாது; நாமும் நம்மை ரக்ஷித்துக் கொள்ள முடியாது' என்று முடிவுக்கு வந்தது.

"உன்னைத் தவிர வேறு எனக்குக் கதியில்லை" என்று பகவானை நோக்கி வேண்டியது. வைகுண்டத்தில் மஹாலக்ஷ்மியும் நாராயணனும் உட்கார்ந்து கொண்டு விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். இருவருள் தோற்றுப் போகிறவர் எழுந்து போய்விடக் கூடாது என்பதற்காக, பகவானுடைய மேல் அங்கவஸ்திரத்தையும் மஹாலக்ஷ்மியினுடைய புடைவை நுனியையும் முடித்து வைத்திருக்கிறது!

அந்த சமயத்தில் யானை கூக்குரலிடுகிறது! திடீரென்று எழுந்தான் பரமாத்மா. போட்ட முடிச்சை அவிழ்க்காததால் மஹாலக்ஷ்மியும் கூடவே ஓடி வந்தாள். எதிரே கருடன் வர, அவர் மேலே ஏறி உட்கார்ந்து கொண்டார் பகவான். அந்த வேகத்தில் மஹாலக்ஷ்மி தொங்கலாடுகிறாளாம்!

சங்கு சக்ராதிகள் தாமாகவே வந்து கைகளில் ஒட்டிக் கொண்டனவாம்!

கஜத்தை ரக்ஷிப்பதற்கு அவ்வளவு உற்சாகம்! அதனால்தான் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தைப் பற்றிச் சொல்லும் போது பராசர பட்டர் இப்படிப் பாடுகிறார்:

'ஹே, ரங்கநாதா! நீ அந்த யானையை ரக்ஷித்ததற்காக உன்னை நமஸ்கரிக்கவில்லை. இந்த அஞ்சலி எதற்கு என்றால், நீ ஓடி வந்த வேகத்துக்காக!'

ஆகையினாலே, தனக்குத் தான் உரியவன் இல்லை என்பதை உணர்ந்து, தன்னைச் சேர்ந்தவர்களும் தன்னை ரக்ஷிக்க மாட்டார்கள் என உணர்ந்தவனை பரமாத்மா ஓடோடி வந்து ரக்ஷிக்கிறான் என்றாகிறது.

நம: சப்தம் எதைக் காட்டுகிறது என்றால், இந்த யானையினுடைய அனுஷ்டானத்தின் சிறப்பை உணர்த்துகிறது.

கஜேந்திராழ்வாருக்கு அந்த அனுஷ்டானத்தை உணர ஆயிரம் ஆண்டுகள் ஆயிற்று. நமக்கு எத்தனை வருடம் பிடிக்குமோ...?

ஆகையினால்தான் சுவாமி தேசிகன் அழகானவொரு சுலோகம் சொன்னார். காஞ்சிபுரத்தில் அஷ்டபுஜங்கர் என்கிற பெயருடன் எட்டுத் திருக்கரங்களோடு காட்சியளிக்கிற பெருமாளைப் பற்றிய சுலோகம். எட்டுத் திருக்கரங்களோடு யானையை ரக்ஷிக்க வந்த கோலம் அது. அதைப் பார்த்து அவர் "ஹே நாராயணா!" என்று அழைத்துச் சொல்கிறார்.

சுவாமி தேசிகன் இப்படிக் கூப்பிட்டுப் பேசுகிற அழகைப் பாருங்கள்.

நாமும் அவ்வாறே திருவாராதனம் பண்ணும்போது பகவானோடு பேச வேண்டும்! அவன் திரும்ப நம்மிடம் பேசுகிறானா இல்லையா என்பது பிறகு வரும். முதலில் நாம் பேச வேண்டும்.

என்ன பேசவேண்டும்...?

சுவாமி தேசிகன் கற்றுத் தருகிறார். பகவானுக்கும் நமக்குமான உரையாடல் இப்படிப் போகும்:

"சுவாமி! உனக்கு ஏதாவது விரதம் உண்டா...?"

உடனே பகவான் நம்மிடம் கேட்பான்: "என்ன? என்ன விரதம்...?"

"ஒரு பெரிய குளத்திலே யாராவது விழுந்தால்தான் நீ காப்பாற்றுவாயோ...?"

"அது என்ன...? நீ சொல்வது எனக்குப் புரியவில்லையே...?"

"பெரிய மடுவிலே நான் விழ, ஒரே ஒரு முதலை வந்து என்னைப் பிடித்துக் கொண்டால்தான் நீ காப்பாற்றுவாயோ...?"

"எனக்கு இன்னும் கொஞ்சம் விளக்கமாகச் சொல்லேன்..." என்கிறான் பகவான்.

# தைவொன்றுமி

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்**



"ஒரு சின்ன மடு.. அதிலே ஒரு யானை வந்து இறங்கியது; ஒரே ஒரு முதலை அதைப் பிடித்துக் கொண்டது. அதற்காக அரை குலைய தலை குலைய ஓடி வந்து நீ ரக்ஷித்தாயே! இப்போது அதைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு பெரிதான சமுத்திரத்திலேயே ஒரு யானை விழுந்திருக்கிறது! அந்த யானையையாவது ஒரு முதலைதான் பிடித்துக் கொண்டிருந்தது. இந்த யானையைப் பல முதலைகள் பிடித்துக் கொண்டிருக்கின்றன. அப்படிப் பிடித்துக் கொண்டிருக்கும்படியான இந்த யானையை நீ மீட்க மாட்டாயா?..."

அப்போதும் பகவான், "என்ன சொல்கிறாய்? புரியவில்லையே...!" என்கிறான்.

அப்போதுதான் இவரே விளக்கிச் சொல்கிறார் பகவானுக்கு:

"இந்த சம்ஸார ஜலதி என்கிற மடுவிலே, அந்த யானையைக் காட்டிலும் கொடிய யானையான நான் விழுந்திருக்கிறேன். அந்த யானைக்காவது ஆயிரம் வருஷத்திலே அகங்காரமும் மமகாரமும்



# ல்லை

ர்யார்

போய்விட்டது. இந்த யானைக்குப் போகுமோ...? இது அதைக் காட்டிலும் கொடிய யானை! அங்கே ஒரே ஒரு முதலைதான் பிடித்துக் கொண்டிருந்தது. இங்கே முதலை மாதிரி, இந்த உலகத்திலே எத்தனையோ விஷயங்கள்- ஒன்று மூக்கைப் பிடித்து இழுக்கிறது; ஒன்று கண்ணைப் பிடித்து இழுக்கிறது; இன்னொன்று காதைப் பிடித்து இழுக்கிறது. - முதலை மாதிரி பல வஸ்துக்கள் இழுக்கின்றன. இந்த உலகத்திலே எத்தனையோ பலபல போக மயக்கங்கள்! அவை நம்மை மதி மயங்கச் செய்கின்றன..." என்கிறார்.

இப்படி உலக விஷயங்கள் நம்மைக் கட்டிப் போடுவதனால்தான், விஷம்- விஷயம் ஆகிய இரண்டினுள் எது கொடியது என்று கேட்டால், விஷத்தைக் காட்டிலும் விஷயமே கொடியது என்று சொல்லப்படுகிறது.

விஷம் ஆனது, பருகினவனை மட்டும் தான் அழிக்கும்; விஷயமோ... அதை நினைத்த மாத்திரத்திலேயே நம்மை அழிக்க வல்லது!

அதனால்தான், விஷத்தைக் காட்டிலும் விஷயம் கொடியது என்று சொல்லப்படுகிறது.

விஷயமாகிற முதலைகள் நம்மைப் பிடித்து இழுக்கும்போது, 'என்னை நீ காப்பாற்ற மாட்டாயா?' என்று நாம் பகவானிடத்திலே பிரார்த்திக்க வேண்டும். நம: என்று சொல்ல வேண்டும்.

சரணாகதி மந்த்ரம் என்றே பெயர் இந்த நம:வுக்கு.

**பா**ஷ்யகாரர் ராமானுஜர் இந்த மந்த்ரத்தைக் குறித்து அழகாக எழுதினார்: தஸ்ய வசீகரணம்.

அந்த பகவானை வசீகரம் பண்ண வேண்டுமானால், நம் பக்கமாக அவனை இழுக்க வேண்டுமானால்,

தத் சரணாகதி ரேவா-

- அவன் திருவடியிலே சரணாகதி பண்ண வேண்டும். அப்படி சரணாகதி பண்ணும் போது சொல்ல வேண்டிய மந்த்ரம் நம:

எனக்குரியவன் நான் அல்ல; என்னைச் சேர்ந்ததும் என்னை ரக்ஷிக்காது. மற்றவர்கள் எனக்கு ரக்ஷகர்கள் இல்லை. நீயே எனக்கு ரக்ஷகன்.

நாராயணனே நமக்கே பறை தருவான்- என்று ஆண்டாள் சொல்கிறாள். அந்த 'ஏ'காரத்துக்கு ஒரு சிறப்பு இருப்பதைக் காட்டு கிறது அது.

பகவத் கீதையிலும் பகவான் அதையே சொல்கிறான்: 'என் ஒருவனையே சரணமாகப் பற்று...' என்கிறான்.

நீயே எனக்கு கதி என்று நாமும் அவனைப் பற்றி, திருவடி தஞ்சம் என்று சொல்ல வைக்கிறது நம: ஆத்ம நிவேதனமாகிற சரணா கதிக்கு நம: என்பதே பிரதானம்.

ஒரு நூறு பேர் உட்கார்ந்து கொண்டு நமோ நம: என்று சொல்லிக் கொண்டிருந்தால் அதை எத்தனை நேரம் வேண்டுமானாலும் கேட்கத் தோன்றாதே!

நம: என்று சொன்னாலே போதும். விழுந்து சேவிக்கக் கூடத் தேவையில்லை. நம: என்றால், எதுவுமே என்னுடையதில்லை; 'எதையுமே கொடுக்கத் தயாராயிருக்கிறேன்' என்று ஆகிறது. எல்லாமே அந்தப் பிரணவ ரூபியாய், அந்தப் பிரணவத்திலே இருந்து கொண்டு ஜகத்தை வியாபிப்பவனின் பொருட்டுதான் என்று ஆகிறது.

**ந**ம: என்பதை பகவான் நாமத்துடன் சேர்த்து ஓம் விஷ்ணவே நம: என்று சொல்ல, அதனால் என்ன கிடைக்கும்...?

எட்டும் எட்டும் எட்டுமாய்... என்று திருமழிசையாழ்வார் பாடல் சொன்னேனே... அந்த எட்டெல்லாம் கிடைக்கும். மூன்று எட்டுக்கள்! அவை என்னென்ன...?

எட்டு என்றால் எட்டெழுத்துக்களை யுடைய திரு அஷ்டாக்ஷரம்.

இன்னொரு எட்டும் அதன்பின் இன்னொரு எட்டும் மீண்டும் வருகின்றன. - எட்டு விதமான சித்திகளை ஒன்று குறிக்கும். மற்றொரு எட்டு, அவனுடன் இருக்கும்படியான மஹாலக்ஷ்மியை- எட்டு ரூபத்துடன் விளங்கும் அவளைக் குறிக்கும்.

இந்த லக்ஷ்மி கடாக்ஷம் ஏற்படும் என்பது சாமான்ய அர்த்தம். விசேஷ அர்த்தம்: எட்டும் எட்டும் கூட்டினால் வருகிற - 16.

பதினாறு மந்த்ரங்களும் கூடியிருக்கும்படியான ரிக் வேதத்துக்குப் பொருளாக இருக்கக் கூடியது புருஷ சூக்தம். புருஷ சூக்த தேவதையாய் இருக்கக் கூடிய புருஷனை நமக்குக் காட்டித் தருகிறது என்பது சிறப்பு அர்த்தம்.

புருஷ சூக்த தேவதை யார் என்றால், பகவான் விஷ்ணு. புருஷன் என்று சொன்னாலே அது விஷ்ணுவைத்தான் குறிக்கும்.

அதனால்தான் விஷ்ணுவைச் சொல்லக் கூடிய சூக்தத்துக்குப் புருஷ சூக்தம் என்று பெயர். இந்தப் புருஷன் என்கிற சப்தத்துக்கு மஹான்களான ஆசார்யர்கள்- பராசர பட்டர், ஆதி சங்கரர், ஆனந்த தீர்த்தர் எல்லோருமே ஒரே மாதிரி பொருள் சொல்லி யிருக்கிறார்கள்.

(தொடரும்)

# மஹாலயம் (அல்லது மஹாளயம்)



பெரிய இருப்பிடம், கல்யாணாதி சுபங்களுக்கு இருப்பிடம் மஹான்களுக்கு இருப்பிடம் என பல பொருள்கள் உண்டு. அதாவது - மஹான்களான பித்ருக்கள் பூமியில் வந்து 16 நாட்கள் தங்கி, புத்ரன் முதலியவர்களுக்கு சுபத்தைச் செய்யும் காலம் என்று பொருள். ஸூர்யன் கன்யா ராசியில் புகுந்தபோது, ஆஷாடம் முதலான 5 ஆவது அபர பக்ஷத்தில் பித்ருக்கள் பூமிக்குச் செல்ல ஏவப்படுகின்றார்கள். அச்சமயம் நமது பெற்றோர், அவர்களது பெற்றோர்களுடன் கூடி நம்மை நாடி வருகின்றனர். அச்சமயம் மஹாளய அன்னச்ராத்தமாகச் செய்வது உத்தமம். இந்த 16 நாட்களில் செய்ய முடியாதவர் அன்ன ச்ராத்தமானால் அடுத்த பக்ஷத்திலும் செய்யலாம்.

தீபாவளி அமாவாஸ்யைவரை பித்ருக்கள் அன்ன ச்ராத்தத்தை எதிர்பார்க்கிறார்களாம். விதிப்படி ஹோமம் செய்து அன்னம் போட முடியாவிடில் அன்னத்திற்கு ப்ரதிநிதியாக வெள்ளி நாணயத்தை அளித்து (அதாவது ப்ராம்மணர்களை வரித்து, ஆஸனாதிகளையும் தக்ஷிணையும் அளித்து) தர்ப்பணம் செய்வதாம். அதே ஹிரண்ய ச்ராத்தம் எனப்படும். அங்ஙனம் பிரதி தினம் செய்ய முடியாதவர் பித்ரு, மாத்ரு திதி அல்லது மஹாபரணீ, வ்யதீபாதம், மத்யாஷ்டமீ முதலிய புண்யகாலத்தில் ஹிரண்யம் செய்வது பழக்கம். ச்ராத்த ப்ராம்மணர்களைப் போல் அல்லாமல், ஸாதாரண ஸமாராதனை போல் அன்று அன்னமிடுவது வழக்கம். அதுவும் தற்சமயம் பலவிடங்களில் நடப்பதில்லை. தக்ஷிணை அளித்து அனுப்புவதுடன் நிற்கின்றது. வீணான செலவுகளைக் குறைத்துக் கொண்டு மஹாளயத்தை அன்ன ச்ராத்தமாகச் செய்வதே உத்தமம். ஹிரண்யமாகவாவது செய்து அன்னமிட வேண்டும். 16 நாட்களிலும் தர்ப்பணத்தையேனும் விடாமல் செய்து ஒரு நாளாவது ஹிரண்ய ச்ராத்தம் செய்ய வேண்டும். அதனால் ஸகலவிதமான நன்மையும் பெறவேண்டும்.

# செய்ய வேண்டிய சில அனுஷ்டானங்கள்

| வீடு தேடி வரும் குமரிகளுக்கும், சுமங்கலிகளுக்கும், பக்தியுடன் தன் கையால் பொட்டு இடலாம். | தினசரி காலை, மாலை கீழ்க்கண்ட ராகங்களில் ஸ்ரீ தேவி சம்பந்தமாக பாடலாம். | கீழ்க்கண்ட வாத்தியப் பின்னணிகளுடன் பாடலாம். | கீழ்க்கண்ட மலர்களைத் தொண்டு மாலை அணிவிக்கலாம்! | கீழ்க்கண்ட தழைகளைக் கட்டு மாலைகளாகக் கட்டி சார்த்தலாம். | பெண் குழந்தைகளுக்கு ஒவ்வொரு நாளும் இவ் விதமாகக் கொடுக்கலாம். | பாலா என்னும் பருவச் சிறுமியின் மகிழ்ச்சிக் காக | கீழ்க்கண்ட பிரசாதங் களை விநியோகிக்கலாம். |
|---|---|---|---|---|---|---|---|
| புனுகு | தோடி | மிருதங்கம் | மல்லிகை | வில்வம் | வாழை | கண்டல் | வெண்பொங்கல் |
| ஜவ்வாது | கல்யாணி | புல்லாங்குழல் | முல்லை | துளசி | மா | வறுவல் | புளியோதரை |
| கஸ்தூரி | காம்போதி | வீணை | சம்பங்கி | மரு | பலா | துவையல் | சர்க்கரைப் பொங்கல் |
| அரகஜா | பைரவி | கோட்டு வாத்தியம் | ஜாதி | கதிர்ப்பச்சை | கொய்யா | பொரியல் | கதம்பம். |
| சந்தனம் | பந்துவராளி | ஜல்லரி | பாரிஜாதம் | விபூதிப்பச்சை | மாதுளை | அப்பளம் | ததியோதனம் |
| குங்குமம் | நீலாம்பரி | பேரி | செம்பருத்தி | சந்தனஇலை | நாரத்தை | வடகம் | தேங்காய்சாதம் |
| சாந்து | பிலஹரி | படகம் | தாழம்பூ | தும்பைஇலை | பேரிச்சை | சூரணம் | எலுமிச்சம்பழம் சாதம் |
| ஸ்ரீசூர்ணம் | புன்னாக வராளி | கும்மி | ரோஜா | பன்னீர் இலை | திராட்சை | முறுக்கு | பாயஸான்னம் |
| மை | வஸந்தா | கோலாட்டம் | தாமரை | மருக் கொழுந்து | நாவல் | திரட்டுப் பால் | அக்கார அடிசில் |

பொடி வகைகள் : கருவேப்பிலை பொடி, பருப்புப் பொடி, இட்லி பொடி, சாம்பார் பொடி, ரசப்பொடி, ஊறுகாய் மிளகாய் பொடி.

திருமண வைபவங்களுக்கு : சீர் முறுக்கு, சீர் அதிரசம், முள்ளுத் தேன்குழல் பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுபபால், அப்பம் முதலியன.

### 'தாத்தாவுக்கு டாட்டா'

போரிவிலியில் ஒரு போராட்டம் - அங்கேயுள்ள மகாத்மா காந்தி ரோடின் பெயரை மாற்றினால்தான் ஆயிற்று என்று போரிவிலிவாசிகளெல்லாம் கூக்குரல் எழுப்பினார்கள். "அடடா, நிலைமை இவ்வளவு முற்றிவிட்டதா?" எனக் கவலைப்பட வேண்டாம்! அந்த வீதி முழுதும் 'பீர்-பார்'கள்! 'சுதந்தரப் பொன்விழா ஆண்டில் இப்படி ஒரு அனாசாரமா? அந்த மகானுக்கு இதைக் காட்டிலும் பெரிய தலைகுனிவு எதுவுமிருக்காது' என்றுதான், வீதியின் பெயரை, 'பீர்பார் ரோட்' என மாற்றியமைக்கும்படி நூதனமான போராட்டம் நடத்தினார்கள். ஏற்கெனவே காந்தியத்துக்கு 'டாட்டா' சொல்லியாகி விட்டது! அடுத்தபடியாக காந்திக்கே 'டாட்டா' சொல்ல வேண்டிய நிலைமை!

### வயசுக் கோளாறு

64 வயது அம்ருத் கோரும், அதே வயதான மனைவி காந்தியும், இங்கிருந்து, அஹிம்ஸா-எக்ஸ்பிரஸில் அமெதாபாத்திற்கு, பயணித்திருக்கிறார்கள். ட்ராவல் ஏஜெண்ட், 'பிழைத்துப் போகட்டுமே' என ஒரு வயதைக் கூட்டி, 65 எனக் காட்டி, டிக்கெட் எடுத்திருக்கிறார். இதனால், சீனியர் சிடிஸனுக்கான கன்செஷன் இவர்களுக்குக் கிடைத்திருக்கிறது! இதை ரயில் ஏறிய பிறகுதான் கவனித்திருக்கிறார் கோர். மனசுக்குள் உடனே, ட்ராவல் ஏஜெண்டுக்கு சிலை எழுப்புவதுதானே வழக்கம்? மாறாக, இவர் கோபப்பட்டு, வெட்கம் வேறுபட்டு, ரூ. 100க்கு ஒரு டிமாண்ட் டிராஃப்ட் எடுத்து, ரயில்வேக்காரர்களுக்கு அனுப்பியும் விட்டார்! முழுக் கட்டணத்துக்கு இன்னும் ஏதாவது குறைவாயிருந்தால், தனக்கு உடனடியாகத் தெரிவிக்கும்படி ஒரு கடிதம்! பாவம், தலைசுற்றி மயக்கமுற்று, கீழே விழ இருந்த ரயில்வே அதிகாரிகளுக்கு, எங்கேயாவது ஹார்ட்-அட்டாக் வந்திருந்தால் என்ன ஆவதாம்?

### தூங்காத நகரம்

ரயில்வேக்காரர்கள், மும்பைக்காரர் களுக்கு திடீர் திடீரென்று 'ஷாக்-ட்ரீட்மெண்ட்' கொடுத்து ரயில்களை கான்ஸல் செய்வது ஒன்றும் புதிதல்ல! ஆனால், இந்த முறை ஆனந்த அதிர்ச்சி! வெள்ளி, சனி வெள்ள மழை



# காந்தி பெயருக்கு எதிர்ப்பு!

யால், நூறு கோச்சுக்களுக்கு மேல் பாதிக்கப்பட, ரயிலைச் சுற்றிப் பின்னிப் பிணைந்துள்ள மும்பை வாழ்க்கை ஸ்தம்பித்து விடும் என்ற ஞானோதயம் தாக்க, ஞாயிறும் திங்களும் அரசு விடுமுறை என்பது தாமதமாக உறைக்க, கடைசியில் புத்திசாலித்தனமாக அதிகாரிகள் ஒரு முடிவெடுத்தார்கள். ரேடியோ, டீவிக்களில் ஞாயிறன்று வேலைக்கு வருமாறு தமது ஊழியர்களுக்கு அழைப்பு விடுத்தார்கள். 'ஊழியர்கள் கண்டு கொள்ளாமலிருந்திருப்பார்கள்; விடுமுறையை வீணாக்குவார்களா?' என்று தானே நினைக்கிறீர்கள்? ஊஹூம்! 90% மறுநாளே ஆஜராகிவிட்டனர்! ஒரே நாளில் ரிப்பேர் வேலை முடிந்து, மறுநாளே ரயில்கள் தயாராகிவிட்டன! வேலையை முடிக்காமல் மும்பைக்காரர்கள் கண் துஞ்சமாட்டார்கள் என்பது எவ்வளவு உண்மை!

## நீ பாதி நான் பாதி!

விழாக்களை நடத்த விளம்பரங்களைத் தேடி அலைந்த காலம் போய் இந்த விழாக்களைத் தேடி விளம்பரங்கள் வந்து குவியும் காலம் வந்து விட்டது! பிரசித்தி பெற்ற லால்பாக் கணேஷ் உத்சவ் மண்டலக்காரர்களைத் தேடி வந்து இந்த வருடம், கோல்கேட் பாமாலிவ்காரர்கள், ஒரு லட்சத்தைக் கொடுத்திருக்கிறார்கள்! வங்கிகளிலிருந்து, வெற்றிலைப் பாக்கு கடைக்காரர்கள் வரை டொனேஷன் மழையாகப் பொழிந்திருக்கிறார்கள்! கோல்கேட் பாமாலிவ்காரர்கள், தங்கள் பொருள்களை விளம்பரப்படுத்தாமல், சமூக இலக்குள்ள வாசகங்களைக் கொட்டை எழுத்துக்களில் பானர்களாக எழுதி வைத்து, விழாவில் 'சமூக சேவை' என்ற கோணத்தையும் புகுத்தியுள்ளனர். விழாவின் மொத்த 'டர்ன் ஓவர்' 16 லட்சங்களுக்குத் தேறுமாம்! ஒரு பாதி பள்ளிக் கூடம் கட்டவாம்; மறு பாதி? அனாதை ஆசிரமங்களுக்கு என்கிறார்கள்! நம்புவோம்!



## ச(ா)ரி நிகர்!

ஆணுக்குப் பெண் சரி நிகர் சமானம் என வாதாடுவது பழைய ஃபாஷன்! பெண்ணுக்கு ஆண் சரி நிகர் என மார்தட்டுவதுதான் இன்றைய 'ட்ரெண்ட்'! இல்லாவிட்டால், ஆண்களுக்காக மட்டும், ஒரு 'ஃபாஷன் ஃபேர்' பெரிய அளவில் நடத்திட முடியுமா? இந்தியாவிலேயே முதன் முதலாக இது போன்ற ஒரு கண்காட்சியை, 'அப்பாரல் ப்ரமோஷன் அண்ட் எக்ஸ்போர்ட் கார்ப்பொரேஷன்'காரர்கள் மும்பையில் வெற்றிகரமாக நடத்தி முடித்திருக்கிறார்கள். "இப்போதெல்லாம், ஆண்களும் நன்றாக உடுத்திக் கொள்ள விரும்புகிறார்கள்; நல்ல தோற்றத்துக்கு ஆசைப்படுகிறார்கள்; இல்லாவிட்டால் மூலைக்கு மூலை ஆண்களுக்கான அழகு நிலையங்கள் முளைத்திருக்குமா? ஃப்ரூட் அண்ட் ஆல்மண்ட் ஃபேசியலுக்கும் அரோமா தெரபி மஸாஜுக்கும், தாடியை 'பெர்ம்' பண்ணுவதற்கும் மணிக் கணக்கில் ஆண்கள் பொறுமையாகக் காத்துக் கிடப்பார்களா?" எனக் கேட்கிறார், இதை ஏற்பாடு செய்த ராஜு மகாயன்கா! உண்மைதான்... முதலில் நீண்ட தலைமுடி, காது தோடு, கழுத்து செயின், கை வளையம்... இப்போது அழகு நிலையம்.. அடுத்து?... புடைவையாக இருக்குமோ?

— ஜெயஸ்ரீ ராஜ்

# 12 கன்னியாகி நிலவினில் ஆடி...

இரவு ஒன்பது மணி பஸ்ஸில் அனந்தாச்சாரி வேலூரிலிருந்து வந்தார்.

அவர் தலையைப் பார்த்ததும் மஹாலக்ஷ்மி கண்களில் நீர்ப் பெருக்கு.

கிருஷ்ணமாச்சாரி மார் மேல் கை கட்டி நின்றார்.

அனந்தாச்சாரிக்கு நெஞ்சு விம்மியது. ராமபிரான் மாதிரி ஒரு பிள்ளையைப் பெற்ற தசரதப் பெருமிதம். மஹாலக்ஷ்மி மாதிரி பொங்கி வெடிக்காமல் தந்தையின் பாதையை ஓர் எதிர்ப்புமின்றி ஏற்க ஒரு பிள்ளை!

எவ்வளவு பாக்கியம் இது?

"மூணு மணி ஆயிடுத்து. ஜுடீசியல் மாஜிஸ்ட்ரேட் ஆத்துக்குப் போய் ஆர்டர் வாங்க. பதினஞ்சு நாள் ரிமாண்ட் போட்டிருக்கார். போலீஸ்காரா அஞ்சு செக்ஷன் போட்டுட்டா. பெய்ல் கெடைக்கறது சுலபமில்லே... முயற்சிப்போம்."

மஹாலக்ஷ்மி வெடித்தாள்.

"இப்ப எல்லாருக்கும் திருப்திதானே!" அனந்தாச்சாரி எதுவும் பேசவில்லை.

திங்கட்கிழமை ஒரு போலீஸ் அதிகாரி பார்க்க வந்திருப்பதாக நர்மதாவை ஒரு கன்விக்ட் வார்டர் அழைக்க வந்தார்.

"யார்?"

"டி.எஸ்.பி. ஷீலா பிரசாத்"

ஓ, பத்ரியின் சகோதரி. மோகன்ராஜ் சொன்னானே அவளா?

நர்மதா வெளியே வந்தாள்.

மகளிர் சிறையின் விஸிட்டிங் ஹாலில் பார்வையாளர்களும்



வையவன்

கைதிகளும் ஒருவர் பேசுவது மற்றவர் காதில் விழுகிறதா இல்லையா என்று சந்தேகிக்க வேண்டிய அளவு இரைச்சல்.

ஒருத்தி ஒரு கைதியைப் பார்த்துவிட்டு விம்மி விம்மி அழுதாள்.

இன்னொருத்தி ஜாலியாக எங்கோ பிக்னிக் வந்திருப்பவளைப் பார்த்துச் சிரிப்பது போல் சிரித்துக் கொண்டிருந்தாள்.

இந்தக் கூட்டத்திலா சந்திக்க வேண்டும்?

நர்மதாவை அழைத்து வந்த வார்டர் அவளை ஒரு தனியறைக்குக் கூட்டிச் சென்றார்.

ஜன்னல்கள் திறந்த விசாலமான அறை. மின்விசிறி சுற்றிக் கொண்டிருந்தது.

சுவர் ஓரமாக ஒரு பெஞ்ச். சற்றுத் தள்ளி கைப்பிடி வைத்து வயர் பின்னிய ஸ்டீல் சேரில் ஷீலா பிரசாத் காக்கி உடுப்பில் உட்கார்ந்திருந்தாள்.

சிலரை எடுத்த எடுப்பில் முதற் பார்வையிலேயே பிடித்து விடும். ஷீலா பிரசாத் அந்த ரகம்.

வட்ட முகம். உணர்ச்சி ததும்பும் பெரிய விழிகள். ஏந்தி விட்டது போன்ற மூக்கு. எங்கோ ஒரு கிரண்பேடி சாயல். உதட்டிலா? கண்ணிலா? இரண்டிலும்தான். இருபத்தியெட்டு வயது மதிக்கலாம்.

நர்மதாவை அழைத்து வந்த வார்டரைப் பார்த்து ஷீலா பிரசாத் தலையசைத்தாள்.

புரிந்து கொண்டு அவர் வெளியேறினார்.

மௌனமாகத் தன்னை உற்றுப் பார்க்கும் ஷீலா பிரசாதைப் பார்த்து அவளுக்கு உள்ளூர வெறுப்பிற்குப் பதில் சிரிப்புதான் வந்தது.

இது அநாகரீகம் என்று இவளுக்கு ஏன் தோன்றவில்லை?

"ஹலோ யூ ஆர் நர்மதா?" கால் மேல் கால் போட்டிருந்த அவள் கைப்பிரம்பை தன் வலது தொடையின் மீது இரு கைகளாலும் உருட்டியவாறே கேட்டாள்.

லேசாகக் கண் மூடித் தலையசைத்தாள் நர்மதா.

"உட்கார்"

"பரவால்லே"

"நெறயப் பேசணும். ஐ டோண்ட் வாண்ட் யூ டு ஸ்டாண்ட்"

நர்மதா கீழ்ப்படிய மறுப்பதுபோல் கேள்வி ஒன்று கேட்டாள்.

"எதைப்பற்றி... இந்தப் போராட்டம் பற்றியா?"

"நோ... ஆஸ் எ வுமன் டு வுமன்"

நர்மதா பெஞ்சில் உட்கார்ந்தாள்.

"ஒன்னைப் பார்த்துமே எனக்குப் பிடிக்குது."

நர்மதா மனசுக்குள் அதையே சொல்லிக் கொண்டாள்.

"ஐ பிடி யூ!"

ஷீலா பிரசாத்தை நர்மதா ஆழ்ந்து பார்த்தாள்.

இவள் தன்னை சோதிக்க வந்தவளா? திசை திருப்ப வந்தவளா? எச்சரிக்க வந்தவளா?

"ஒங்க தாத்தா அனந்தாச்சாரியார் பத்தி நெறயக் கேள்விப்பட்டிருக்கேன். ஐ ஹேவ் எ கிரேட் ரெஸ்பக்ட் ஆன் ஹிம்."

ஷீலா பிரசாத் உண்மை பேசுகிறாள் என்று அவளுக்குத் தோன்றியது.

"ம்ம்... அந்த ஜெனரேஷன் வேற... அந்தக் காலமே வேறே."

விலகி நிற்பது போல் ஒரு புன்முறுவல் செய்தாள் நர்மதா.

"இப்ப அதுக்கெல்லாம் மதிப்பில்லே... யூ ஆர் யங்... ஒனக்கே தெரிஞ்சிருக்குமே! ஜனங்க ஜஸ்ட் ஒரு நினைவுச் சின்னத்தைப் பார்க்கற மாதிரிதான் அந்த க்வாலிடியை சுலபமா தாண்டிடறாங்க."

"................"

"வெல்... உனக்கு என்ன நோக்கம்? நீ பாப்புலர் ஆகணுமா? டு யூ வாண்ட் டு பிகம் எ லீடர்...?"

உறுதியாக அதை மறுப்பதுபோல் நர்மதாவின் தலை அசைந்தது.

"தென் திஸ் ஈஸ் வேஸ்ட்.... ஆஸ் எ வுமன் டு வுமன் சொல்றேன். ஒலகம் எங்கயோ போய்க் கொண்டிருக்கு. நீ..."

நர்மதாவுக்குள் ஒரு தீரமான எதிர்ப்புணர்வு தோன்றியது. அமைதியாக அதை வெளியிட்டாள்.

"அது எங்கெங்கியோ போயிடக் கூடாதே..."

பளிச்சென்று ஷீலா பிரசாத் அவள் குரலின் உறுதியைக் கேட்டு நிமிர்ந்தாள்.

"குடிக்கத் தண்ணி. பயிர் விளைய மண். இப்படி உள்ளது நஷ்டமாயிடக் கூடாதே..."

பரிதாபப்படுவது போல் ஷீலா பிரசாத் சிரித்தாள்.

"நீ தடுத்து நிறுத்திடப் போறே?"

"அவ்வளவு ஈகோ எனக்கு இல்லே. எதிர்ப்புக் குரல் எழுப்ப வேண்டியது கடமைன்னு நெனக்கறேன். என்னோட சேந்து அப்படி நெனைக்கறவங்க நெறயப் பேர் இருக்காங்க.

பட் தெ ஆர் சைலன்ட்."

"நவ் ஆஸ் எ வுமன் டு வுமன் கேக்கறேன். இந்த முயற்சியிலே நீ எதையெல்லாம் இழக்க வேண்டி வரும்னு ஒனக்குத் தெரியுமா?"

நர்மதா அமைதியாக அவளைப் பார்த்து புன்முறுவல் செய்தாள்.

"ஐ அட்மயர் யூ" என்றாள்.

ஷீலா பிரசாத் கேள்விக்குறியோடு அவளைப் பார்த்தாள்.

"ஒரு பாங்க் ஆபீசராவோ, டாக்டராகவோ காலேஜ் லெக்சரராகவோ ஆக உங்களுக்குத் தோணலியே"

அவள் எங்கோ தொட்டுச் சீண்டுவது ஷீலா பிரசாதுக்குப் புரிந்தது.

"இட்ஸ் எ கேரியர் ஆம்பிஷன்"

"எனக்கும் அப்படி ஒண்ணு இருக்கலாமே"

ஷீலா பிரசாத் அவளை முழுமையாகப் புரிந்து கொண்டாள்.

"ஏன் பெயில் வேண்டாம்னுட்டே?"

"ஒரு போராட்டத்துக்கு ஜெயில் வாசம் ஒரு தொடர்விளைவுதானே. அதுக்குத் தப்பிச்சுக்க ஆசைப்பட்டா வீட்டிலேயே இருக்கலாம்."

அந்த பதில் ஷீலா பிரசாத்துக்குப் பிடித்தது.

"பத்ரி ஒன்னைப் பார்க்க வர்றேன்னான்."

சட்டென்று அவளுக்குள் ஒரு சலனம் எழுந்தது. இவள் வேறெதற்கோ வந்திருக்கிறாள்.

"நாட் நெஸஸரின்னு சொல்லிடுங்கோ"

இருவர் பார்வையும் சந்தித்தன. ஆழம் பார்த்துக் கொண்டன.

"ஓகே... கோர்ட்ல சந்திப்போம்..."

ஷீலா பிரசாத் எழுந்து நின்றபோதுதான் அவள் தன்னைவிட உயரம் என்று தெரிந்தது.

**ம**றுநாள் பார்வையாளர் நேரத்தில் மீனாட்சி சந்திக்க வந்தாள். அதிசயமாக அன்று அவ்வளவு கூட்டமில்லை.

நர்மதாவைப் பார்த்ததுமே மீனாட்சியின் கண்களில் ஈரம் படர்ந்தது.

"ஏய் என்னடீ இது?"

அவசரமாக மீனாட்சி மூக்கை உறிஞ்சிக் கண் துடைத்தாள். மெலிதாய்ச் சிரித்தாள்.

முதலில் விநோதமாய் இருந்தாலும் முதுகு சிலிர்த்து நெஞ்சு நெகிழ்ந்தது.

இந்த மூன்று நாள் சிறைவாசம் அவளை இப்படித் தாக்கும் என்று நர்மதா நினைக்கவில்லை.

அந்த நட்பின் முன், தான் சிறியவளான உணர்வு புரண்டது.

"ஊர்ல என்ன விசேஷம்?" நர்மதா கேட்டாள்.

மீனாட்சி அதற்குப் பதில் தராமல் வேறு கேள்வி போட்டாள்.

"ஜெயில் ரொம்ப கஷ்டமா இருக்கா நர்மதா?"

நர்மதா சிரித்து விட்டாள்.

## அருள்வாக்கு



**ப**கவத் ஸ்மரணத்தைவிட பகவத்பாத ஸ்மரணம் அதிககாந்தி! நல்லது, கெட்டது எல்லாவற்றுக்கும் காரணமாயிருந்து கொண்டு, கெட்டதற்காக நம்மை தண்டிக்கவும் செய்யும் பகவானைவிட, நல்லதே செய்து கொண்டு, நாம் எத்தனை கெட்டுக் குட்டிச் சுவராயிருந்தாலும் நம்மை உத்தரிப்பதற்கென்றே வந்த பகவத் பாதாளை ஸ்மரிப்பதே நமக்குப் பெரிய சாந்தி.

'எப்படி மனஸை அர்ப்பிப்பது, அதாவது அது கண்ட கண்டதுகளை நினைக்காமல் அவரையே எப்படி மனஸில் கொண்டு வந்து நிறுத்துக் கொள்வது?' என்றால், ஸுலபமாக வழி சொல்லித் தருகிறேன். "ஹரஹர சங்கர, ஜய ஜய சங்கர" என்று மனஸுக்குள்ளேயே சொல்லிக் கொள்வதுதான் வழி. அதன் வழியாக அவர் மனஸுக்குள் வந்து விடுவார். "வையகம் துயர் தீர" ஞானஸம்பந்தர் காட்டிக் கொடுத்த வழி ஹர நாம உச்சாரணந்தானே?

*ஆழ்க தீயதெல்லாம்! அரன் நாமமே*
*சூழ்க, வையகமுந் துயர் தீர்கவே!*

அதனால் "ஹரஹர" என்று சங்கர நாமாவோடு சேர்த்துச் சொல்வோம். அவர் திக்விஜய சங்கரராக இருந்ததால் "ஜய ஜய" என்றும் சேர்த்துச் சொல்வோம். வேறே உபந்நியாஸம் வேண்டாம். புத்தி ஸாமர்த்தியங்கள் வேண்டாம்.

'எதற்கு வ்ருதாவாக (வீணாக) சாதுர்ய வாதங்கள் பண்ணிக் கண்டசோஷம் (தொண்டைக்கு உபத்ரவம்) விளைவித்துக் கொள்கிறாய்! நீ புத்திசாலி இல்லையா? பேசாமல் சம்புவின் பாத பத்மங்களை நினைத்துக் கொண்டு பரமானந்தத்தை அநுபவி' என்று அந்த சம்புவின் பாதமாக வந்த பகவத்பாதாளே சொல்லியிருக்கிறார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

"இல்லே... சூப்பரா ஏஸி ரூம்லே ஷவர் பாத் அட்டாச்சோட படு பிரமாதமா இருக்கு"

இவள் இண்டல்காரி என்று தோன்றுவது போல் மீனாட்சி லேசாக மூக்கை உறிஞ் சினாள்.

"அஞ்சலி... மோகனா... கார்த்திகா... பிரமீளாவையெல்லாம் பார்க்கறியா?"

அவர்கள் நர்மதாவோடு கைதானவர்கள்.

"ஓ... பார்க்கறேன்! அவங்க என்னையும் ஒன்னையும் விட ரொம்ப உறுதியா இருக் காங்க... போதும் க்ஷேமலாபம் விசாரிச்சது. என் கேள்விக்குப் பதில் சொல்லு! ஊர்ல என்ன விசேஷம்"

"ரெண்டு நாளா ஒண்ணும் நடக்கலே. நாளைக்கு மறுபடியும் ஃபாக்டரிக்கு மணல் வாரப் போறதா நியூஸ் வந்திருக்கு..."

அதைக் கேட்டதும் தோற்றுவிடுவோமா என்று பதைப்பு எழுந்தது நர்மதாவுக்கு.

"தாத்தாவைப் பார்த்தியா?"

"பார்த்தேன். நாளைக்கு அடுத்த பாட்ச். சர்தார்ஜிதான் லீடர்."

"ஊர்ல ஏதாவது ரியாக்ஷன் இருக்கா?"

"அனகல்பட்டு, பொத்தேரி, கிருஷ்ணாபுரம், கல்தான்பேட்டை, செம்மாத்தூர்லருந்து நம்ப கிளாஸ்மேட்ஸ் எல்லாம் கூடி சர்தார்ஜியைப் பார்க்க வந்திருக்காங்க."

நர்மதாவின் கண்களில் ஒளி. அவை யாவும் திருக்கூடலைச் சுற்றிய ஆற்றங்கரை ஊர்கள். பாதிக்கப்பட்டவை.

"விஷயம் சீரியஸாயிருக்கு! அவங்க திரண் டதாலதான் சர்தார்ஜிக்கு புதிய உற்சாகம் வந்திருக்கு"

"அப்படியா..."

ஒரு பொறி விழுந்தால் போதும் என்று காய்ந்து சருகேறி வனங்கள் காத்திருக்கின்றன. நிர்வகிக்க ஒருவரை நாடி ஏங்கும் சிற்றம் காத்திருக்கிறது.

"அப்புறம்..." மீனாட்சி இழுத்தாள். சொல்லப் போவதைக் கேட்டு இவள் எப்படி மாறுவாளோ என்று மீனாட்சி முகத்தில் ஒரு தயக்கம்.

"என்னடீ மென்னு முழுங்கறே!"

"நேத்து சாயங்காலம் அந்த கன்ஸ்ட்ரக்ஷன் எஞ்சினியர் என்னைப் பார்க்க வந்தார்."

கொஞ்சம் தைரியம் வருவித்துக் கொண்டு அவள் பேசினாள்.

"யாரு.... பத்ரி நாராயணனா? ஒன்னைப் பார்க்கவா? ஏன்... என்ன விஷயம்?"

"கொஞ்சம் 'கஸ்' பண்ணேன் பார்ப்போம்"

'லீலா பிரசாதிடம் முந்தா நேற்றுதான் பத்ரி தன்னைப் பார்க்க சிறைக்கு வர வேண்டி யதில்லை என்று சொன்னோம்! அதற்குள் அவன் மீனாட்சியைத் தேடிப் போயிருக்கிறானே!'

"இப்படி புதிர் கிதிர் போட்டு எரிச்சல் கிளப்பாதே!" செல்லமாகக் கோபித்தாள் நர்மதா.

"சரி... டைரக்டா விஷயத்துக்கு வர்றேன்! அவர் ஒன்னை லவ் பண்றார்டி!"

நர்மதா முகம் சிவுக்கென்று மாறி சகஜம் போய் ஓர் இறுக்கம் வந்தது. சிவந்தது. உதட் டைக் கடித்துக் கொண்டு மீனாட்சியை முறைத்தாள். அவள் முகத்தில் பரவிய பயத்தைக் கண்டதும் சிரித்து விட்டாள்.

"என்னடீ சிரிக்கறே?" என்று மீனாட்சி கேட்டாள்.

"எந்த நேரத்திலே எங்க வந்து என்ன சொல்லத் தோணறது பாரேன் ஒனக்கு."

"ஆமா... இதுக்கெல்லாம் ஒரு டைம் டேபிள் வேணும் போல!"

"நீ காதல் தூதா... தோழி விடு தூதா?"

"சீ, முட்டாள். ஒனக்கு பெயில் பெட் டிஷன் தர சர்தார்ஜியும் அவருமா பெரிய வக்கீல் தேடி நேத்தெல்லாம் அலைஞ் சிருக்காங்க."

"பெயிலா... வாட் நான்ஸென்ஸ்! யார்றி பெயில்ல வரணும்னு துடிக்கறது இங்கே!"

"நீ இருந்துடுவே... சர்தார்ஜி பேத்தி! மத்த வங்க...! எத்தனை பிரச்னையை விட்டுட்டு வந்தாங்களோ... அவங்க?"

"எல்லாரும் பெயில்லே வர பிரியப்பட றாங்களா?"

"இருக்காதா?"

நர்மதா யோசித்தாள். தனது மறுப்பு ஒரு சொந்த விவகாரம். எல்லோரையும் நிர்பந்திக்க முடியுமா? ஒருக்கால் முன்கூட்டியே கலந்து பேசி பக்குவப்படுத்தி இருக்க வேண்டுமோ! சிறைக்குள் இருந்து பேசி அவர்களை திடப்படுத்த வாய்ப்பில்லை.

"எல்லோரும் வரப் பிரியப்பட்டா நான் மறுக்க மாட்டேன்."

மீனாட்சியின் முகம் மலர்ந்தது. வந்த வேலை நிறைவாக முடிந்தது போல் அவள் சிரித்தாள்.

இரண்டு நாள் கழித்து வியாழன் மாலை மூன்று மணிக்கு பெய்லில் நர்மதாவும் போராட்டக் குழுவினரும் வெளி வந்தனர்.

சிறைக்கு வெளியே அனந்தாச்சாரி நிற்பார் என்று நர்மதா எதிர்பார்த்தாள். இல்லை. கிருஷ்ணமாச்சாரியும் கலையரசனும்தான் நின்றனர்.

"தாத்தா எங்கேப்பா?"

"நேத்திக்கு அவர் அரஸ்ட் ஆயிட்டார்."

கலையரசன் போராட்டக் குழு ஊர் திரும்ப ஒரு வேன் ஏற்பாடு செய்திருந்தார். எல்லோரும் ஏறினர்.

"நாம அப்பறம் போலாம்மா... மீனாட்சியை ஹாஸ்பிடல்லே சேத்திருக்காங்க. பாத்துட்டுப் போவோம்."

"எதுக்குப்பா?.... அவள் திடுக்கிட்டாள்.

"சொல்றேன்..." என்று காத்திருந்த ஆட் டோவில் கிருஷ்ணமாச்சாரி ஏறினார்.

(தொடரும்)

# 6

மைசூருக்குப் போனோம். ஊருக்கு வெளிப்புறத்தில் ஒரு தியேட்டர். பக்தியான ஊராச்சேன்னு மொதல்ல பக்த துருவன், சதி அனுசுயான்னு போட்டோம். போணியாகல்ல. அங்கே தமிழர்கள் வேற ரொம்பக் கம்மி. ஏன் கலெக்ஷன் ஆகல்லன்னு பார்த்தா அப்புறம்தான் விஷயம் தெரிஞ்சது.

அப்ப அங்க குப்பி வீரண்ணா குருப் ரொம்ப பாபுலர். பிரசித்தமான பலபேரு அங்க இருந்துதான் ஷேப் ஆகி வெளியே வந்தாங்க. தியாகராஜ பாகவதர் நடிச்ச ஒரு படத்தில் 'மாயா பிரபஞ்சம் ஆனந்தம் வேறில்லைன்னு' பாடினாங்களே அஸ்வத்தம்மா - வேலைக்காரி படத்தில் எனக்கு ஹீரோயினா வந்த எம்.வி. ராஜம்மா - இவங்கள்ளாம் குப்பி ட்ருப்ல இருந்து வந்தவங்கதான்.

சரி, எப்படி நம்ம டிராமாக்களுக்கு கலெக்ஷன் அதிகமா கிடைக்க வழி செய்யறதுன்னு யோசனை பண்ணி டக்குன்னு 'கிருஷ்ண லீலா'வை எடுத்துப் போட்டோம். அவ்வளவுதான். கூட்டம் அலைமோத ஆரம்பிச்சிடுத்து. குப்பி நாடகங்களுக்குப் போற கூட்டம் எல்லாம் எங்க பக்கம் திரும்பிடுச்சு. செம கலெக்ஷன். நல்ல பேரு. அது மட்டுமல்ல. அந்தக் கம்பெனி நடிகர்களும் வந்து எங்க நாடகத்தைப் பார்த்துட்டு போனாங்க.

எங்க கம்பெனியில ஒரு சாமியார் இருந்தாரு. அவரு வெளியே போறப்ப என்னை மறக்காம கூட்டிக்கிட்டுப் போவாரு. ஏன்னா மார்க்கெட்ல ஏதாவது அவரு வாங்கறப்ப கன்னடத்தில் பேசணுமில்ல. அதுக்குதான். நான் ஒண்ணும் கன்னடத்தில்? பெரிய எக்ஸ்பர்ட் இல்ல. ஆனா ஊட்டியில இருந்ததனால படுகா பாஷை கொஞ்சம் தெரியும். அதுக்கும் கன்னடத்துக்கும் நெறய ஒத்துமை. அதனால என்னால சமாளிக்க முடியும். சாமியார் ஏதாவது வாங்கிட்டுத் திரும்பறப்ப எனக்கு ஹோட்டல்ல காப்பி டிபன் வாங்கித் தருவார்.

இங்க கொஞ்சம் ஹிஸ்டரி சொல்லல்லேன்னா எனக்குத் தலை வெடிச்சிப் போயிடும். என் கணக்குப்படி மாலிக்காபூர் காலத்தில அங்கேயிருந்து "ஓடி வந்த" கன்னடியர்கள்தான் படுகர் இனத்தவரா மாறியிருக்கணும். 1310ம் வருஷம் ஹைதர் அலி காலம்னு சிலபேர் சொல்லுவாங்க. ஆனா என்னோட கணக்குப்படி - என் ஆராய்ச்சின்னும் சொல்லலாம். அது மாலிக்காபூர் காலம்தான்.

மைசூர்ல இருந்தப்போதான் என் வாழ்க்கைல மொத மொதலா தசரா பார்த்தேன். அடேயப்பா... அப்படியே நின்னவன் நின்னவன்தான்.

அங்கே இருக்கிறப்போதான் எங்களோட பக்தராமதாஸ் டிராமாவை படமாக்கணும்னு கோயமுத்தூர்ல இருந்து பரமேஷ்வர் பிக்சர்ஸ்காரங்க வந்து எங்களைப் பம்பாய்க்கு கூட்டிப் போனாங்க.

அந்தப் படம் தயாரானப்போ டிராமா கம்பெனியில ரிஷிகள், தடிகள், குடிகள் வேஷம் போடறவங்க அவ்வளவா தேவையில்ல.

ரிஷிகள் வேஷம் உங்களுக்குத் தெரியும். தடிகள்னா சேவகன் வேஷம் போடறவங்க. குடிகள் அப்படின்னா பொதுமக்கள் வேஷம். இதுல எது பெரிசுன்னு நினைக்கிறீங்க? ரிஷிகள்தான்னு சொல்லுவீங்க. தெரியும். அதுதான் இல்ல. என்னைக் கேட்டா தடிகள்தான்னு சொல்வேன். ஏன்னா இத்தினி வாசலுக்கு இத்தினி பேர் சேவகன்னு போட்டா அத்தினி பேர் நின்னாகணும். ஒருத்தன் வரல்லேன்னா கூட ஆள் இல்லாத குறை நல்ல ஆடியன்ஸுக்குத் தெரிஞ்சி போயிடும். குடிகள்



படம் : யோகா

# நான் ஜென்டில்மேன் அல்ல!

எம்.என். நம்பியார்

அப்படியில்லை. கும்பல்ல ஒருத்தர் ரெண்டுபேர் இல்லேன்னாலும் ஒண்ணும் குடிமுழுகிப் போயி டாது.

இந்த நிலைமையில, படம் எடுக்கறப்போ தேவையில்லாத - உபயோகப்படாத ஆளுங்களை லீவு கொடுத்து வீட்டுக்கு அனுப்பிட லாம்னு கம்பெனியில முடிவு பண்ணாங்க. அந்த உபயோகப்படாதவங்க லிஸ்ட்ல என் பேர் இருக்கும்னு எனக்கு நம்பிக்கை இருந்தது. ஏன்னா நான் அப்ப தடி, குடி இப்படிதான் வேஷம் போட்டு வந்தேன். போதும்டா சாமி, ஊர் பாக்கப் போவலாம்னு தோணிச்சி. ஊருக்கு ஒரு லெட்டர் எழுதினேன். 'நீங்க உடனடியா கம்பெனிக்கு ஒரு கடுதாசி போடுங்க. நான் வந்துடறேன்!' இதைத் நான் பம்பாய்ல கேட்வே ஆஃப் இந்தியாவில நாங்க வேடிக்கை பாத்துட்டு இருந்தப்ப 'ஏன்டா... ஊருக்குப் போவணும்னு குதிச்சியே... போயிருந்தா இந்த இடத்தையெல்லாம் பாத்திருக்க முடியுமாடா'ன்னு வாத்தியார் குத்திக் காட்டினாரு.

ஊருக்கு போணுமேன்னு எங்க கம்பெனியில பலபேர் ரொம்ப வருத்தப்பட்டாங்க. நான் மட்டும் ரொம்ப சந்தோஷப்பட்டேன்.

ஏன்னா நான் கம்பெனியில சேர்ந்த ஆறு மாசத்தில ஒரு பெரிய உண்மையை கண்டு பிடிச்சிருந்தேன். "எனக்கும் இந்த நடிப்புத் தொழிலுக்கும் கொஞ்சம் கூட சம்பந்தமே இல்லை"ங்கறதுதான் அந்த உண்மை.

ஆனா கடைசியில ஊருக்கு அனுப்புற லிஸ்ட்ல என்னோட பேர் வரவே இல்லை. ரொம்ப வேதனையாப் போச்சு.

தர்மபுரி வந்துட்டு அப்புறமா சென்னைக்கு வந்து சேர்ந்தோம். அப்போ மெட்ராஸுன்னு பேரு. மிருகக் காட்சிச் சாலைக்கும், சென்ட்ரல் ரயில்வே ஸ்டேஷனுக்கும் நடுவில ஒரு ரொம்பப் பெரிய தியேட்டர் இருந்தது. பெரியவர் கன்னையா அங்கேதான் டிராமா போடறது வழக்கம். செமி பர்மனென்ட் தியேட்டர். அன்னிக்கி மெட்ராஸுல இருந்த ஜனங்கள்ல முக்கால்வாசி பேரை அந்தத் தியேட்டர்ல உக்கார வச்சிடலாம். அவ்வளவு பெரிசு.

ரெண்டு வருஷம் அங்கே டிராமா போட்டோம். 'இன்பசாகரன்'னு ஒரு படத்திலேயும் நடிச்சோம். அதுக்காக எனக்கு 750 ரூபாய் சம்பளம் கொடுத்தாங்க. முதல் படத்துக்கு வாங்கிய சம்பளம் நாப்பது ரூபா. ஏற்கனவே சொல்லியிருக்கேன். இப்ப ரெண்டாவது படத்துக்கு எழுநூற்று அம்பது.

நான் உங்கள ஒண்ணு கேக்கறேன். நல்லா யோசனை பண்ணி சொல்லுங்க. நாப்பது பெரிசா? எழுநூத்தி அம்பது பெரிசா?

'இதென்னடா பைத்தியக்காரத்தனமான கேள்வி? எழுநூத்தி அம்பது

தானே'ன்னு நீங்க சொல்றது கேக்குது.

என்னைப் பொறுத்தவரை நாப்பதுதாங்க. எழுநூத்தி அம்பது கையில வந்தாதானே ஸார் அது பெரிசு?

எங்க வந்தது? எங்க கம்பெனி சமையல்ல நம்பியார்னு பெயர்ல இன்னொருத்தன் இருந்தான். அவன் கிட்ட கையெழுத்துவாங்கி பணத்தை கம்பெனி எடுத்துகிச்சி.

அவங்க ஆர்க்யூமென்ட் என்னென்னா, கம்பெனியிலதான் சம்பளம் தர்றோமே... படத்துக்குனு தனியா எதுக்கு?

அதுவுமில்லாம, படம் எடுக்க ரொம்ப நாள் ஆனதால கம்பெனிக்கு நஷ்டம். அதை எப்படி ஈடுகட்டறது? இப்படித்தான்.

நான் என்ன சொல்றேன்னா, அந்த டூப்ளிகேட் நம்பியார்கிட்ட இல்லாம இந்த ஒரிஜினல் நம்பியார் கிட்டவே 'கையெழுத்து போடுடா... பணம் உனக்குக் கிடையாது... கம்பெனிக்குதான்'னு சொல்லியிருந்தாலும் போட்டுத்தான் இருப்பேன். வேற என்ன செஞ்சிருக்க முடியும்?

மெட்ராஸ்ல இருந்தப்ப எப்பவாவது எங்களை வெளியே கூட்டிட்டுப் போகும்போது ரோட்டில வெயில்ல தார் உருகி கால்படாம இருக்குமேன்னு ஒரு ஜோடி செருப்பு வாங்கினேன். விலை ஒரு ரூபாய் ரெண்டு ரூபாய் இல்லை. மூணு ரூபா. இப்ப அந்தச் செருப்பு முன்னூறு ரூபா கொடுத்தாக் கூட கிடைக்காது.

கூடவே இன்னொரு தப்பும் பண்ணினேன். ஒரு கொசுவலை வாங்கிட்டேன். அதுகூட ஏன் வாங்கினேன்னு கேட்டா எனக்கு அப்ப அம்மை வந்து புண் பூரா ஆறாம இருந்தது. இருந்தாலும் நாடகத்துல நடிக்க சரியா ஆள் வராதபோது 'வாடா நம்பியார்'னு அழைப்பு வரும். அப்படியே போய் ஆக்ட் பண்ணிட்டு வருவேன். ராத்திரி படுத்தா கொசு ரோதனை சொல்ல முடியாது. ரெண்டு கொசு வந்து ஆளை அப்படியே பொரட்டிப் போடும். இன்னொரு நாலு கொசு, ஏமாந்தா ஆளை அப்படியே தூக்கி அந்தப் பக்கமா வச்சிடும். இந்த தொல்லையைச் சமாளிக்கவே நான் கொசு வலை வாங்கினேன்.

அப்ப எங்க நாடகக் கம்பெனியில கொசு வலை கட்டித் தூங்கின ஒரே நடிகர் நான்தான். ஆனா சம்பளம் எவ்வளவுன்னு நினைக்கிறீங்க? வெறும் பத்து ரூபா. மெட்றாஸ்ல இன்னொரு அனுபவம். நாங்க யாரும் வீட்டைவிட்டு வெளியே வரக்கூடாது. முடியாது. நான் வாட்ச்மேனை தாஜா பண்ணி, ஒரு சைக்கிள் எடுத்துக்கிட்டு காலையில சால்ட் கோட்டர்ஸ் வழியா இரும்பு வாராவதிக்குப் போய் அங்கே நின்னு சூரிய உதயம் பாக்கணும்னு போனேன். எனக்கு அதைப் பாக்கணும்னு ரொம்ப ஆசை. நாலைஞ்சு நாள் நான் போனப்போ எல்லாம்

"எப்பேர்ப்பட்ட சிடுமூஞ்சியையும் அவர் சிரிக்க வச்சிடுவாரு..."

"அவர் ஜோக் எழுத்தாளரா என்ன?"

"இல்லை. போட்டோகிராஃபர். ஸ்டூடியோ வச்சு நடத்தறார்!"

— என் உஷாதேவி

மேகம் வந்து மூடிக்கிச்சி. ஒரு நாள் இப்படி ஏமாந்து திரும்பி வரேன். கேட்ல வாத்தியார்! "எங்கடா போய்ட்டு வரே?"

விவரம் சொன்னேன்.

'சரி... கவலைப்படாதே. நாம நாகர்கோவில் போறப்போ நான் கூட்டிட்டுப் போறேன்."

மெட்ராஸ் டு வேலூர். அங்க இருந்தப்ப 1939ல திருப்பதிக்குப் போனேன். அங்கே முழங்கால் முறிச்சான்னு ஒரு இடம் இருந்தது. இப்ப இல்லை. அப்ப என் வயசு, உடம்பு பலம் எல்லாம் சேர்ந்து மலைமேல ரெண்டு மணி நேரத்தில் ஓடியே ஏறினேன். நடுராத்திரி பன்னிரண்டு மணிக்குப் போனா எங்களுக்காக கோயில் கதவு திறந்தா இருக்கும்!

கடலூர்ல இருந்த சமயம் ஒரு சோக சம்பவம். 'நம்பியார் பாவம் தூக்குப் போட்டு செத்துப் போயிட்டான்'னு ஒரே பேச்சு. சில பேர் எங்கிட்டவே 'ஏம்பா.... நீ இன்னா தூக்கு போட்டு செத்து போயிட்டியாமே'ன்னு நேராகவே துக்கம் விசாரிச்சாங்க.

அட, அந்த ஊர்ல கம்பெனி இருந்தப்ப நம்பியார்னு இன்னொருத்தன் வந்து சேர்ந்தான். சின்னப் பையன். எப்ப பார்த்தாலும் கைரேகை பாத்துட்டே இருப்பான். தன் கையையே பிடித்து தற்கொலைலதான் சாவேன் சொல்லிட்டே இருப்பான். இரண்டு முறை கடல்லயும் விழுந்தான். ஆனால் நீச்சல் தெரியும். நீந்தி கரையேறிட்டான். ஒரு நாள் உண்மையிலேயே அவன் ரேகை பலன் பலிச்சுப் போச்சு. தூக்கு போட்டு செத்தான். கடைசியில பாத்தா, ஏதோ அவனுக்கு காதல் தோல்வியாம்.

அப்ப முடிவு பண்ணேன். எப்படியாவது நம்பியார்ங்கற பேரை மாத்திக்கணும்னு. ராஜமாணிக்கம் சொன்னார். 'நாராயணன் நம்பியார்'னு இங்கே நீட்டி முடிக்க முடியாதுடா. இங்கேயே நெறய நாராயணனுங்க இருக்காங்க. நீ நம்பியாராவே இரு.'

அப்புறம் சக்தி நாடக கம்பெனியில, சினிமாவில ஜூபிடர் பிக்சர்ஸ் எல்லாம் 'ஸார்... ஸார்.. என் பேரு நாராயணன். அப்படியே மாத்திக்கிறேன் ஸார்'னு எவ்வளவு கெஞ்சியும், 'அந்தக் கதையே வாணாம். நம்பியார் நல்ல



நடிகர்னுதான் உங்களை புக் பண்றோம். நாராயணன்னு மாத்திட்டா அப்புறம் இந்த நாராயணன்தான் அந்த நம்பியார்னு ஜனங்களுக்குப் புரிய வைக்கிறதுக்குள்ளாற எங்க பிராணன் போய்விடும்'னு அடிச்சிச் சொல்லிட்டாங்க. நம்பியார்னு நிலைச்சிப் போச்சி.

நான் பேரை மாத்திக்க ஆசைப்பட்டதுக்கு முக்கியமான காரணம் அப்ப காங்கிரஸ்ல 'ஜாதிப் பேரை முக்கியத்துவம் கொடுத்து வச்சிக்கக் கூடாது'ன்னு தீர்மானம் போட்டிருந்தாங்க. அதனாலதான் தீவிரமா இருந்தேன். ஆனா தோத்துப் போயிட்டேன்.

கும்பகோணம். என்னோட கால்கள் மறக்கவே முடியாத இடம். அங்கே காம்ப் போட்டிருந்தப்பதான் ஒரு சண்டைக் காட்சியில எக்குத் தப்பா காலை வச்சி கால்ல பயங்கரமா அடிபட்டு யானைக்கால் போல வீங்கிப் போச்சு. ஆஸ்பத்திரில இருந்தேன்.

இப்ப கூட ரொம்ப நேரம் கீழே உட்கார்ந்து இருந்தா கால்ல வலி வருது. இது நிரந்தரம். நாடக அனுபவம் தந்த பரிசுன்னு சொல்லலாமா? இல்லே விழுப் புண்ணா! ஏதோ ஒண்ணு.

டிராமா போடும்போது எங்க வசூல் நல்லா ஆகும், எங்கே ஆகாதுன்னே சொல்ல முடியாது. கல்லிடைக்குறிச்சி சின்ன ஊர்தான். அங்கே அமோகமா கலெக்ஷன் ஆகும். பக்கத்தில் அம்பாசமுத்திரம். பெரிய ஊர்னு பேர். ஆனா கலெக்ஷன் ஆகாது.

கல்லிடைக்குறிச்சியில இருந்தபோதுதான் கல்கி பத்திரிகை முதல் முதலா வெளி வந்தது. அதுக்கு முன்ன நாங்க பேசிக்கறதுண்டு. "என்னடா இது கல்கி விகடன்ல இருந்து பிரிஞ்சி போயிட்டாரே"ன்னு. ஆலப்புழையில 'ஞான சவுந்தரி' நாடகத்தில எனக்கு 'ஜோசப்'னு ஒரு ரோல். ஞான சவுந்தரி சித்தி கொடுமையில ரொம்ப வேதனைப்படறா. அவளுக்கு ஆறுதலா இருக்கற மாதிரியான ரோல். நல்ல வேஷம். தினம் கம்பெனியில இருந்து தியேட்டருக்கு நடந்து போறப்ப வழியில் பிச்சைக்காரங்க 'ஜோசப்பே... ஜோசப்பே'ன்னு கூப்பிட்டு 'அரை சக்கரம் போடு'ன்னு கேட்பாங்க.

இந்தச் சக்கரம் பத்தி கொஞ்சம் சொல்றேன். பிரிட்டிஷ்காரன் சில சமஸ்தான அதிபதிகளுக்கு வசதிகள் பண்ணிக் கொடுத்திருந்தான். நிஜாம் எட்டணா நாணயங்களை அடிக்கலாம்னு பர்மிஷன். இன்னொரு சமஸ்தானம் நாலணா காயின்ஸ் அடிக்கலாம். அப்படி திருவனந்தபுரம் சமஸ்தானத்துக்கு அரை அணா அடிக்கலாம்னு அனுமதி இருந்தது. அந்த அரை அணாவைதான் அரை சக்கரம்னு அப்ப சொல்வாங்க.

இப்படி தினமும் இந்த பிச்சைக்காரங்களுக்கு அரை சக்கரம் போட்டுட்டே இருந்தா என் வாழ்க்கைச் சக்கரம் ஓடாம நின்னு போயிடுமே! அதுக்காக ஒரு ஐடியா பண்ணினேன்.

கம்பெனியில சம்பளம் வாங்கிட்டு வெளியே வரவங்க கண்ணில படற மாதிரி ஒரு நீளமான பேப்பர்ல படம் போட்டு ஒரு படக்கதை போல எழுதி வச்சேன். அதில என்ன இருக்கும்னா 'கைலாச பணம்'னு எழுதிய உண்டி ஒண்ணு. அதுக்குப் பக்கத்துல நான் எம்.என். நம்பியார் போல வரைஞ்சி அவர் நின்னுகிட்டிருப்பார். அடுத்த படத்தில அந்த உண்டியில பணம் போடறவங்க நேரா சொர்க்கத்துக்கு போறாங்க. பரமேஸ்வரனே அவங்களை ஆசீர்வதிக்கிறார். இன்னொரு படத்தில பணம் போடாதவன் ரோட்ல போறான். மிலிட்டரி வாரி வந்து மோதி செத்துப் போறான். (அப்ப வார் டைம், அதனால மிலிடரி லாரி) அவனை எம கிங்கர்கள் வந்து தரதரன்னு இழுத்துப் போறாங்க. தேள், பாம்பு, பூரான் அவங்கை புடுங்கற மாதிரி அதில படம் போட்டிருக்கும்.

இந்தப் படக்கதையைப் பாத்தவங்க நிறைய காசு போட்டாங்க. பணம் சேர்ந்தது. நான் இந்தப் பணத்தையெல்லாம் சேர்த்து அப்பப்ப, சாம்பார் சாதம் பண்ணி, எங்க கம்பெனி ஆளுங்க மதியம் சாப்பிட வரும்போது அவங்க கிட்டேயே இதைப் பொட்டலம் கட்டி பாவம், பிச்சைக்காரங்க எங்க இருக்காங்கன்னு கண்டு பிடிச்சி நீங்களே விநியோகம் பண்ணிடுங்க அண்ணே'ன்னு கேட்டுப்பேன்.

நல்ல காரியம்தானேன்னு அவங்களும் ஆர்வமா அப்படியே பண்ணாங்க.

கடைசியில நல்ல பேரு யாருக்குன்னு நினைக்கிறீங்க?

எங்க வாத்தியாருக்கு.

"இந்த ராஜமாணிக்கம் பிள்ளையோட தங்கமான மனசை பார்யா... பிச்சைக்காரன் எங்க இருக்கான்னு தேடிக் கண்டு பிடிச்சி சாப்பாடு போடறரே... நல்லா இருக்கணும்."

(தொடரும்)




• சதாசிவத்திடம் விருது பெறுகிறார் ராஜ்குமார் பாரதி

# கல்கியும் பாரதியும் கைகோத்த கலைவிழா!

திருச்சி ஈ.ஆர். ஹைஸ்கூலில் படித்துக் கொண்டிருந்தான் இளைஞன் கிருஷ்ணமூர்த்தி. எந்நேரமும் கையால் வாயைப் பொத்திக் கொண்டு உட்கார்ந்திருப்பான். அதைக் கவனித்த வகுப்பாசிரியர், மாணவன் ஏதோ ரகசியமாய் மெல்கிறானோ என்று சந்தேகித்து கையை அகற்றச் செய்ய.... மேலுதட்டில் அரும்பிய மீசையை மறைக்கவே பையன் அப்படி கஷ்டப்பட்டான் என்று உணர்ந்தார். வறுமை காரணமாக காலாகாலத்தில் பள்ளிப் படிப்பை மேற்கொள்ள முடியாமல், தாமதமாகக் கிடைத்த ஓர் உறவினரின் உதவியைப் பெற்றுப் பள்ளியில் சேர்ந்திருந்தான் கிருஷ்ணமூர்த்தி. சின்னப் பிள்ளைகளிடையே மீசை முளைத்த வாலிபனாக அமர்ந்து படிப்பது சங்கடத்தைத் தந்தது!

இந்த கிருஷ்ணமூர்த்திதான் பள்ளியிறுதித் தேர்வை எழுதாமல் சத்தியாகிரகத்தில் ஈடுபட்டு சிறை சென்று, தேசியவாதியாகவும், எழுத்தாளராகவும், பத்திரிகையாளராகவும், கலை ரசிகராகவும் விமர்சகராகவும் வளர்ந்த 'கல்கி'.

பாரதியாரிடம் அமரர் கல்கி கொண்டிருந்த ஒப்பற்ற மரியாதைக்கு சாட்சியாக இன்று எட்டயபுரம், பாரதி மணி மண்டபம் விளங்குகிறது என்றால், அந்த மகாகவியிடம் அவர் வைத்திருந்த ஆழமான அன்பின் அடையாளம் அவர் இயற்றிய இரண்டு பாடல்கள்: 'தெய்வத் தமிழ் நாட்டிலே'; 'தவழும் பலித்ததம்மா' என்ற அந்த இரு பாடல்களும் அந்தக் காலத்தில் எம்.எஸ். சுப்புலட்சுமியின் குரலில் பதிவாகி நாடெங்கும் ஒலித்து தமிழர்களைப் பரவசப் படுத்தின.

அந்தப் பரவசத்தைப் புதுப்பிக்கும்படியான ஒரு நூதன அனுபவம் கடந்த செப்டெம்பர் 9 அன்று வாய்க்கப் பெற்றது. அன்று அமரர் கல்கியின் பிறந்த தினம். கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை ஏற்பாடு செய்திருந்த விழாவில், பாரதியாரின் கொள்ளுப் பேரனும் பிரபல கர்நாடக இசைக் கலைஞருமான ராஜ்குமார் பாரதி, 'தவழும் பலித்ததம்மா' என்ற பாடலைத் தொடங்கிய போது, தமிழும், இசைச் சிறப்பும் மட்டுமின்றி அன்றைய நிகழ்ச்சியில் அமைந்த அற்புதமான பொருத்தங்களும் சேர்ந்து ரசிகர்களை உணர்ச்சிக் கடலில் ஆழ்த்திவிட்டன.

இளம் கர்நாடக இசைக் கலைஞர்களுக்கு ஆண்டுதோறும் வழங்கப் பெறும் கல்கி விருதை இம்முறை பெற்றவர் ராஜ்குமார் பாரதி. அன்றைய விருது வழங்கும் விழாவில்

• இசை நிகழ்ச்சி

அவருக்கு அதை அளித்தவரோ, பாரதி பாடல்களை வீதிதோறும் பாடி சுதந்தரக் கனலை எழுப்பிய பழுத்த சுதந்தரப் போராட்ட வீரர் கல்கி சதாசிவம். எம். எஸ். – சதாசிவம் தம்பதி தங்கள் வருகையால் விழாவைச் சிறப்பிக்க, செம்மங்குடி*சீனிவாச அய்யர் தமது வாழ்த்துக் கடிதத்தால் ராஜ்குமார் பாரதிக்கு மேலும் பெருமை சேர்த்தார். நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கியவரோ, சுதந்தர இந்தியாவில் பசுமைப் புரட்சிக்கு வித்திட்ட சி. சுப்ரமண்யம்.

இப்படி திரிகூடல் சங்கமம் போல மூன்று முக்கிய நபர்களிடமிருந்து சிறப்பான வாழ்த்துக்கள் வரப்பெற்ற ராஜ்குமார் பாரதியின் உற்சாகம் அன்று அவர் வழங்கிய இசை நிகழ்ச்சியை முழுமையாய் வியாபித்தது.

சம்பிரதாய சுத்தமாக வஸந்தா வர்ணத்தில் கச்சேரியைத் தொடங்கியவர், ஒவ்வொரு சரண ஸ்வரம் பாடிய பிறகும் முல்லை வாசல் சந்திரமௌலிக்கு வயலின் வாய்ப்பு தர, ஆரம்பத்திலேயே களைகட்டி விட்டது. தொடர்ந்து 'கணபதி தாளை கருத்திடை வைப்போம்' என்ற பாரதி பாடலில் கம்பீரம்; கற்பனை ஸ்வரங்களில் ஜிலுஜிலுப்பு என்று இசையின் பரிமாணங்களைத் தேடித் தேடி அவர் வழங்க, காம்போதியில் 'எந்தையும் தாயும்' என்று ஆரம்பித்த போது, தேசபக்தி யுணர்வு அவையை ஆக்கிரமித்தது. சுத்த தன்யாசி ராக ஆலாபனையைத் தொடர்ந்து ஸ்ரீ சுப்ரமண்யேன என்ற தீக்ஷிதர் கீர்த்தனை, ஸ்யாமா சாஸ்திரியின் தருணம் இதம்மா, ஆகியவற்றையும் பாடி கர்நாடக இசைக் கச்சேரிக்கான காத்திரத்தைச் சேர்த்துக் கொண்டார். பிரதான ராகமான பேகடையின் ஆலாபனையைத் தொடர்ந்து தியாகராஜரின் 'நாதோபாஸன' கீர்த்தனைதான் எடுக்கப் போகிறார் என்று காத்திருக்க, 'கண்ணன் திருவடி எண்ணுக மனமே' என்று ஓர் எதிர்பாராத ஆச்சரியத்தை எடுத்துக் கையாண்டார். இதில்

• தலைமையுரை: சி.எஸ்.




நிரவலும் ஸ்வரமும் விஸ்தாரமாகப் பாடிய பிறகு அளவெடுத்துத் தைத்த சட்டை போல் இசைவான, அழகான மினி தனியாவர்த்தனம்! ஸ்கந்த பிரஸாதின் மிருதங்கமும் கிருஷ்ணனின் முகர்சிங்கும் இழைந்தன. இதைத் தொடர்ந்துதான் 'தவமும் பலித்ததம்மா' ஒலித்துப் பரவசமூட்டியது. 'காணி நிலம் வேண்டும்' கண்கள் பனிக்கச் செய்ய, அந்த நிலையில் நம்மை வீட்டுக்கு அனுப்ப ராஜ்குமாருக்கு மனம் வரவில்லை! ஒரே குதூகலமயமாய் ஒரு

• பார்வையாளர்கள்



தில்லானா – சிந்து பைரவியில் –பாரதியின் வரிகளைப் பயன்படுத்தி ராஜ்குமாரே வடிவமைத்தது! அதன்பின் மங்களம்!

விழா தொடக்கமும் மங்களகரமாய்தான் அமைந்தது. காவல் தெய்வமான விநாயகர் துதி பாடி துவக்கி வைத்தவர் செல்வி சரண்யா. வரவேற்புரை வழங்கிய நிர்வாக அறங்காவலர் கல்கி ராஜேந்திரன், அமரர் கல்கி ஈ.ஆர். ஹைஸ்கூலில் 'வாய் பொத்தி' அமர்ந்திருந்த நாட்களை நினைவுகூர்ந்து, ஏழைமை காரணமாகப் படிப்பைத் தொடர முடியாமலிருக்கும் மாணவர்களுக்கு அறக்கட்டளை உதவித் தொகை அளித்து வருவதைக் குறிப்பிட்டார்.

இந்த ஆண்டு 105 மாணவர்களுக்கு 85,000 ரூபாய் உதவித் தொகை விநியோகமாகியிருக்கிறது என்பது கல்கி வாசகர்களையும் ரசிகர்களையும் பெருமிதம் கொள்ள வைக்கும் செய்தி. அமரர் கல்கி நூற்றாண்டு விழா சமயத்தில் இத் தொகை ஒரு லட்சமாக உயரும் என நம்பிக்கை தெரிவித்த நிர்வாக அறங்காவலர், நூற்றாண்டு விழாக் குழுவுக்கு சி. எஸ். தலைமையேற்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

இதற்கு இறையருளையும் கோருமாறு கூறிய சிஎஸ், தமது தலைமையுரையில் ராஜாஜி- கல்கி- டிகேசி. ஆகிய மூவருக்கும் இருந்த நெருக்கத்தைக் குறிப்பிட்டுப் பேசினார். ராஜாஜியின் 'கைவேலையுடன் இணைந்த கல்வித் திட்டம் புத்துயிர் பெற வேண்டும்; அமரர் கல்கி எழுத்துக்களில் புகுத்திய எளிமை விஞ்ஞானக் கல்விக்கும் பரவ வேண்டும்; பல மாகாணங்களிலும் வசிப்பவர்கள் கையாளும்படி எளிமையான ஹிந்துஸ்தானி இணைப்பு மொழி நடைமுறைக்கு வர வேண்டும்.' என்று கருத்து கூறினார். இந்த மும்முனைத் தாக்குதல் நடந்தால்தான் கல்வித் தரம் உயர்ந்து நாடு முன்னேறும். நமது சுதந்தர தினத்தின் பவள விழா கொண்டாட்டங்களுக்கு முன்னதாகவாவது நாம் இந்த முன்னேற்றத்தைக் காண வேண்டாமா.. என்று அவர் பேசியதை அனைவரும் ஆமோதித்து ஏற்றது பலமான கைதட்டலில் வெளிப்பட்டது.

ஒரு விழாவில் சிறப்புரையும் கலைநிகழ்ச்சியும் சரிசமமான சுவாரஸ்யத்துடன் அமைவதென்பது அபூர்வம். அந்த அபூர்வம் அமரர் கல்கி பிறந்த தின விழாவில் மிக இயல்பாக அமைந்ததைக் குறிப்பிட வேண்டும். ராஜ்குமார் பாரதியின் ஏற்புரையில் நிதானமும் மெய்யுணர்வும் பளிச்சிட்டன என்றால் ஆனந்தி ராமச்சந்திரன் வழங்கிய நன்றியுரையில் நகைச்சுவையும் நெகிழ்ச்சியும் ததும்பியது. நிகழ்ச்சிக்கு வந்தவர்கள் மனநிறைவுடன் திரும்பினார்கள்.

— மோஹன்ராம்

படங்கள் : யோகா

# தங்கம் தந்த வாழ்வின் அங்கம்

என் திருமணம் காதல் திருமணம் அதிலும் கலப்புத் திருமணம். எதிர்ப்புகள் அதிகம் இல்லாவிட்டாலும் யாரும் உதவாத சூழல்!



பெற்றோர் சம்மதம், அழைப்பிதழ் அச்சிடுவது, ஆடை அணிமணிகள் வாங்குவது, சாப்பாட்டுச் செலவு என சகலமும் என் பொறுப்பு.

கொஞ்சம் கொஞ்சமாக எல்லாவற்றையும் நானே செய்யத் துவங்கினேன். முன்னதாகவே திட்டமிட்டு, எதிர்வரக்கூடிய எல்லா பிரச்சனைகளையும் எதிர்பார்த்து, ஒவ்வொன்றாக சமாளித்த பின்பும் இறுதியில் மணப்பெண் ணுக்குப் போட வேண்டிய தங்கச் சங்கிலியில் வந்து தடங்கல் ஏற்பட்டது.

அனைவரும் கைவிட்ட அந்நிலையில் எனக்கு கை கொடுத்து உதவியது ஸ்ரீராம் தான். ஏற்கெனவே நான் சீட்டு சேர்ந்திருந்தது அந்த நெருக்கடியான நேரத்தில் உதவியது. அந்த மாத ஏலத்தில் சீட்டை தள்ளி எடுத்தேன் உரிய நடை முறைகள் முடிந்த கையோடு உடனே பணம் கைக்கு வந்து சேர்ந்தது.

அந்தத் தொகை இப்பொழுது என் மனைவியின் கழுத்தில் தங்கச் சங்கிலியாக தவழ்ந்து கொண்டுள்ளது. தேவையான நேரத்தில் தங்கம் தந்து எங்கள் வாழ்வின் அங்கமாகி விட்ட ஸ்ரீராமை எந்நாளும் எங்களால் மறக்க இயலாது.




அன்புடன்,

ம. கவுதமன்
ஒசூர் - 635 109.

மன்மோஹன் சிங் நிதியமைச்சராகும் வரை எடுப்பார் கைப்பிள்ளையாக இருந்த ரிசர்வ் வங்கி, அவர் பதவியேற்ற பிறகு ஒரு புதுத் தெம்பு பெற்றது! அந்த அமைப்புக்கு நியாயமாக வழங்கவேண்டிய இயக்க சுதந்தரத்தை சிங் முழுமையாக அளித்ததே அதற்குக் காரணம்.

அந்தத் துணிவுடனேயே ரிசர்வ் வங்கி தொடர்ந்து செயல்படுவதற்கான அடையாளங்கள் அவ்வப்போது நம் கவனத்துக்கு வருகின்றன.

ரிசர்வ் வங்கியின் முக்கியப் பணி, நாட்டின் நிதி நிலைமையைக் கண்காணித்து. பணப் புழக்கத்துக்குப் பொறுப்பேற்பதுதான். இதைக் கண்ணும் கருத்துமாகச் செய்து வருவதுடன், விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துவதற்கான அறிவுரைகளையும் அது அரசுக்கு வழங்க வேண்டும். 'நிதிப் பற்றாக்குறையை ஈடுசெய்ய, கண்ணை மூடிக் கொண்டு நோட்டு அச்சடிப்பது தவறு' என்று எடுத்துச் சொல்லும் தார்மிக உரிமையும் கடமையும் ரிசர்வ் வங்கிக்கு உண்டு.

இந்த உரிமையைச் சமீபத்தில்




# சிதம்பர சொதப்பல்!

வீரியத்துடன் பயன்படுத்தியிருக்கிறது ரிசர்வ் வங்கி. கடந்த நிதியாண்டு (96-97) குறித்த வருடாந்திர அறிக்கையில், மத்திய அரசைக் கடுமையாக எச்சரித்திருக்கிறது ரிசர்வ் வங்கி. சிதம்பரம் தயாரித்த பட்ஜெட்டில் செலவுகள் வரவைக் காட்டிலும் மிக அதிகமாக இருக்கின்றன. நிதியமைச்சர் கணக்கிட்டுள்ள அளவுக்கு அரசுக்கு வருவாய் வர வாய்ப்பில்லை... இந்த பட்ஜெட்டே தறிகெட்டுப் போய் அரசைத் தவிப்பில் ஆழ்த்தப் போகிறது என்று அபாயச் சங்கு ஊதியிருக்கிறது!

இந்த எச்சரிக்கை ஏற்கெனவே பொருளாதார வல்லுனர்களும் ஐ.எம்.எஃப். அமைப்பும் எடுத்துச் சொன்னதுதான்.

சமீபத்திய ரிசர்வ் வங்கியின் அறிக்கையையாவது அரசு சீரியஸாக எடுத்துக் கொண்டு 'நிவாரண' நடவடிக்கை எடுக்க வேண்டும். 'நாட்டின் மொத்த உற்பத்தி (GDP) கணிசமாகக் குறையப்போகிறது. இதற்குத் தொழில் துறையின் மந்த நிலையே காரணம்' என்றும் ரிசர்வ் வங்கி எடுத்துச் சொல்லியிருக்கிறது.

விவசாய உற்பத்தி (பருவமழை பொய்க்காததால்) பெருகியிருந்தாலும் தொழில்துறை மந்தமும், அன்னியக் கடன்களும் பெரும் சுமைகளாக அழுத்துகின்றன என்பது ஐ.எம்.எஃப். விமர்சனம்!

இதற்கிடையேதான் பெட்ரோலியப் பொருட்கள் விலையுயர்வு அறிவிக்கப்பட்டிருக்கிறது. உடனே தமிழக அரசு பஸ் கட்டணங்களை உயர்த்திவிட்டது. டீசல் விலையுயர்வை மட்டுமின்றி இதர பல நஷ்டங்களையும் சீர்செய்யும் முகமாக கட்டணம் அபரிமிதமாக உயர்த்தப்பட்டிருக்கிறது. இதனால் போக்குவரத்துக் கழகத்தின் நஷ்டம் நீங்கி, லாபம் வருகிறதோ இல்லையோ, தமிழகத்தில் விலைவாசி ஜுரம் போல் உயரப் போகிறது!

புதிய பொருளாதாரக் கொள்கை வேர்பிடித்த பிறகு, விலைவாசி உயர்வு விகிதம் ஒற்றை இலக்கத்துக்கு மெள்ள இறங்கி வந்தது - இனி அது மீண்டும் பழையபடி இரட்டை இலக்க விகிதாசாரத்துக்கு டபுள் ஸ்பீடாக உயரும்!

- வி. கோபாலன்

வட்டமேஜை

✉ 'துப்பாக்கிச் சப்தம்-பிரதமரின் மௌனம்' தலையங்கம், மைய அரசுக்கு நல்ல எச்சரிக்கை. மைய அரசின் மெத்தனம் நம்மை அச்சம் கொள்ளச் செய்கிறது!
சென்னை - 14, பொ. வஜ்ரவேலு.

✉ பேசினால் ஊழல் ஒழிந்து விடுமா? என்ற தலையங்கத்தில் அரசியல்வாதிகளுக்கு நல்ல வார்த்தை கூறியிருக்கிறீர்கள். ஊழலை ஒழிப்போம், ஊழலை ஒழிப்போம் என்று ஆளுக்காள் அறைகூவல் விடுக்கின்றார்களே யொழிய ஒருவரும் செயலில் இறங் கக் காணோம். அது மட்டுமல்ல; ஊருக்குத்தான் உபதேசம்; உனக்கும் எனக்கும் இல்லை என்பதைப் போலத்தான் அரசியல்வாதிகள் நடந்து கொள்கிறார்களேயொழிய உண்மையிலேயே ஊழலை ஒழிக்க வேண்டும் என்ற அக்கறை யாருக்கும்

## யாருக்கும் அக்கறை இல்லை!

கிடையாது.
திருச்சுழி,
சுந்தர் அழகேசன்.

✉ உமா பாரதியின் பேட்டி ஆணித்தரமாகவும், தெளிவாகவும் இருந்தது- சாதாரண அரசியல்வாதி களுடையதைப் போலல்லாமல்.
நாட்டறம்பள்ளி, பாலு.

✉ இராம. வேம்புவின் விநாயகர் துதியும் சரி, அதற்கு பிரிதா வரைந்திருந்த வித்தியாசமான ஓவியமும் சரி, மனத்தை விட்டகல நெடுநாட்களாகும்!
அரசரடி, நெல்லை வி. சிவா.

✉ 'எல்லோரும் அழகாய் இருக்கலாம்' கட்டுரையில் குறிப் பிட்டுள்ள ஆலோசனைகள் யாவும் மிகவும் பயனளிப்பதாக இருந்தது.
கோயம்புத்தூர், கோ. கல்யாணசுந்தரம்.

✉ நாட்டியப் பேரொளியின் சமீபத்திய புகைப்படத்தைக் கல்கியில் கண்டபோது ஆச்சரியமாக இருந்தது. அவருடைய உருவமே மாறிவிட்டதே! ஆனாலும் உடல் இளைத்தாலும் அவர் கருத்துக்கள் இளைக்கவில்லை!
பெங்களூர் - 16, அ. சங்கரன்.

✉ சங்கரநாராயணனின் 'ஆடிக்காத்து' சிறுகதையின் எடுப்பும், தொடுப்பும், முடிப் பும் வித்தியாசமாய் இருந்தது. கதை சொன்ன பாணி மனத்தில் நின்றது. கதை எழுதியவருக்கு ஒரு கைகுலுக்கல்!
வலையபட்டி, எம். பாலசுப்பிரமணியன்.

✉ எத்தனையோ டென்ஷனுக்கு மத்தியிலும் ராமன் அப்துல்லாவை கொஞ்சம் ரசிக்கும்படி தந்திருக் கிறார் பாலு மகேந்திரா. அதைப் பாராட்டாமல் அந்தப் படைப்பாளியை ரொம்பவும் குத்துகிறீரே? ஆமாம், உமது விமர்சகர் என்ன 'பெப்ஸி'யைச் சார்ந்தவரா?
சேலம் - 9, மு. இரவிச்சந்திரன்.

✉ ராசி பலன் பக்கங்களில் கூட இத் தனை சுவாரஸ்யங்களைக் கல்கியிடம் மட்டுமே எதிர்பார்க்க முடியும்... அக்னி சர்மா அசத்துறாருங்கோ!
நெடுங்காடு, கா. பிரபாகரன்.

✉ 'குறையொன்றுமில்லை' தொடரின் ஆரம்பத்தில் திருமங்கையாழ்வார் திருச்சந்தவிருத்தத்தில் என்று அச்சிட் டிருக்கிறீர்கள். திருச்சந்தவிருத்தம் திருமழி சையாழ்வாரால் பாடப் பெற்றது. இது நிச்சயமாக எழுதியவரின் தவறாக இருக்க முடியாது.
சென்னை - 42, எம்.என். ஸ்ரீநிவாசன்.

*(தவறுக்கு வருந்துகிறோம். - ஆர்.)*

# என்றும் இளமையாய் இருப்பது எப்படி?

"இளமையாகத் தோற்றமளிக்க வேண்டுமா? தரமான நட்பு வட்டத்தை அதிகரித்துக் கொள்ளுங்கள்"- இப்படிச் சொன்னால் கொஞ்சம் ஆச்சர்யம் ஏற்படலாம்.

கலகலப்பு, புன்னகை, உற்சாகம் - இத்தனையும் உள்ள ஒரு முகத்திற்கு (அதன் வயதோ, நிறமோ எப்படிப்பட்டதாக இருந்தாலும்) ஒரு தனி அழகு இருக்கத்தான் செய்கிறது. நல்ல நண்பர்கள் அமைந்தவர்களுக்கு மன இறுக்கம் குறையும். வாழ்க்கையில் ஒரு பிடிப்பு இருக்கும். நண்பர்களிடம் பகிர்ந்து கொள்ளும் போது மகிழ்ச்சி இரு மடங்காகிறது. துன்பம் பாதியாகக் குறைகிறது! லோ? அகத்தில் அழகு முகத்தில் தெரிகிறது!



"அதென்னவோ உண்மைதான். கல்லூரியில் எனக்கு நிறைய தோழிகள். திருமணமான பிறகு கொச்சின், பெங்களூர் என்றெல்லாம் கணவரின் வேலை மாற்றலைத் தொடர்ந்து, வெவ்வேறு இடங்களில் வசிக்க நேர்ந்தது. சோதனையாக அங்கு அக்கம்பக்கத்தில் இருந்தவர்கள் எல்லாம் ரொம்ப ரிசர்வ் டைப். உணர்வுகளைப் பகிர்ந்து கொள்ளவே தோழமையில்லை என்ற நிலையில் கல்லூரித் தோழிகளின் அருமை அதிகமாகவே புரிந்தது. புது சிநேகிதிகள் கிடைத்திருப்பார்களே என்ற ஒரே காரணத்திற்காக 'நாமும் வேலைக்குப் போயிருக்கலாமே' என்ற எண்ணம் தோன்றும். என்ன இருந்தாலும் உண்மையான நட்பின் இடத்தை உறவினர்களால் நிரப்பவே முடியாது" என்றார் ராணி ராமச்சந்திரன்.

"சுகமான சங்கீதம், அமைதியான சூழ்நிலை, குழந்தையின் மழலை - மனமகிழ்ச்சி ஏற்பட பல வழிகள் உண்டு. நல்ல நட்பும் இதே வகையைச் சேர்ந்ததுதான்" என்கிறார் எழுத்தாளர் பாமா கோபாலன்.

"சுமார் இருபது வருடங்கள் ஒரு தனியார் நிறுவனத்தில் வேலை செய்துவிட்டு, சில காரணங்களால் ஒரு நாள் திடீரென்று வேலையை ராஜினாமா செய்துவிட்டேன். என்றாலும் மனத்தில் சில நாட்களுக்கு ஏகக் குழப்பம். ஒரு நாள் என் இரண்டு நண்பர்களுடன் பனகல் பூங்காவில் காலார நடந்தபடி விஷயங்களைப் பகிர்ந்து கொண்டேன். அவர்களும் விவாதித்தார்கள். சுமார் இரண்டு மணி நேரப் பேச்சுக்குப் பின் என் மனத்தின் பாரம் நீங்கியது. நான் எடுத்த முடிவு சரி என்று தோன்றியது. இத்தனைக்கும் என்னை விட எட்டு வயது இளையவர்கள் அந்த நண்பர்கள்" என்றார்.

அதுதான், அதேதான் நட்பில் ஒரு முக்கிய விஷயம். சம வயது இருந்தால்தான் நட்பு என்பதில்லை. சொல்லப்போனால், நம்மைவிட கணிசமாக வயது குறைந்த ஓரிருவரையாவது நண்பர்களாக்கிக் கொள்வது நல்லது என்கிறார்கள் மனவியல் மருத்துவர்கள். அப்படி நடைமுறைப்படுத்திக் கொண்டால் முதுமையின் ஆழ்ந்த கால கட்டத்துக்குள் செல்லும் போது நம் நண்பர்கள் அனைவருமே இறந்து போய் கடும் தனிமையை அனுபவிக்கும் நிலையைத் தவிர்க்கலாம்.

"நட்புன்னா என்ன சார்? நினைச்சாலே மகிழ்ச்சி தர ஒரு விஷயம்தானே? வீட்டிலே, பெரியவங்க எடுத்துக்





• பாமா கோபாலன்

சொன்னா கேட்காதவங்க கூட அதையே நண்பன் எடுத்துச் சொன்னா கேட்கிறாங்களா இல்லையா? நல்ல நண்பன் இருந்தா நாலு நல்ல விஷயங் களைத் தெரிஞ்சிக்கவும் வாய்ப்பு இருக்கே!" என்கிறார் ராஜ்கபூர் - உயர்நிலைப் பள்ளி மாணவர்.

"நல்ல நண்பன்றவன் நாணயமானவனா இருக்கணும். முக்கியமா நம்மைப் பற்றிய குறை பாடுகளை நம்ம முகத்துக்கு எதிரேயே எடுத் துச் சொல்லணுமே தவிர பின்னாலே சொல் லக் கூடாது. காலப் போக்கில் ஒருத்தர் வாழ்க் கையிலே பல புது ஸ்நேகிதர்கள் ஏற்படுவதும், ஏற்கெனவே கூடப் பழகிட்டிருந்த சிலர் பிரிந்து விடுவதும் இயற்கைதான். ஆனாலும் கடைசி வரை 'இன்னர் சர்க்கிளிலே' உள்ள ஒரிருவரின் நட்பாவது ஆயுள் முழுவதும் தொடரத்தான் வேண்டும். அப்படியிருந்தா தான் அது ஒருவனின் வாழ்க்கைக்கு அழகு" என்கிறார் கல்லூரி மாணவர் ஸ்ரீனிவாசன்.

## இளமைப் போட்டி – 6

**சூப்பர் ஸ்டாருக்கு 'மெகா ஸ்டார்' நண் பனாக நடித்த நாலெழுத்துப் படம் எது?– தொடரின் முடிவில் கூப்பன் வரும். அதில் எழுதி அனுப்ப இப்போதே குறித்து வைத்துக் கொள்ளுங்கள்!**

"சில வருடங்களுக்கு முன் என் உடல் நலம் திடீரென்று பலவீனமாகி விட்டது. தினசரி வாழ்க்கை முறையே ஒரு சவாலாக விளங்கத் தொடங்கியது. அந்த சமயத்தில்தான் உரு வானது ஒரு நட்பு. அந்த அண்டை வீட்டுக் காரர் என் வீட்டுக்கான சாமான்களை வாங்க உதவினார். என்னோடு தொடர்ந்து மருத்துவ மனைக்கு வந்தார். மருந்துகள் வாங்க உதவினார். ஓய்வு பெற்ற வயதில் என் வாழ்க்கையைப் பற்றி கவலைப் பட்டுக் கொண்டிருந்தபோது வந்த அந்த நண்பர்தான் எனக்கு நம்பிக்கை விளக்காக விளங்கியவர். எப்போதும் இருண்டுகிடந்த என் முகம் ஒளிரத் தொடங்கியதே அதற்கப்புறம்தான்! அதற்காக கடவுளுக்கு நன்றி சொன்னேன்" இதைச் சொல்லி முடிக்கும்போதே ஜெகன் னாதனின் வயதில் சில வருடங்கள் குறைந்து விட்டது போல் தோன்றியது நமக்கு!

— **ஜி.எஸ்.எஸ்.**

படங்கள்: **ஸ்ரீஹரி**



SHRIRAM GROUP COMPANIES
MADRAS




## ஷாராஜ்



கதவு தட்டுகிற ஓசையில் எழுந்து போய் ஜன்னலில் பார்த்தான். இரண்டாவது படிக் கட்டின் மீது அவர் நின்று கொண்டிருந்தார். காவி வேட்டி. பட்டையான கோடுகள் போட்ட சட்டை. தலை முடியும் மார்பு வரைக்குமான தாடியும் செம்பட்டையில் கறுப்பு கலந்து வெளுத்திருந்தது.

"சின்னப் பெரியப்பா, நீங்களா? அடையாளமே தெரியல. உள்ள வாங்க."

ஸோஃபாவைக் கை காட்டியும் அடுத்திருந்த பிரம்பு நாற்காலியிலேயே அமர்ந்தார். சற்றே நிமிர்ந்து பவ்யமாக உள்ளிருந்து அம்மா வெளிப்பட்டு "மருதமலையில இருந்தா?" எனத் திகைப்பு மாறாத முகத்துடன் கேட்டாள். ஊருக்குப் போய் விட்டு இங்கே வந்தாராம்.

"சுந்தரம் எங்க?"

"ஆஃபீஸ் விஷயமா திருச்சி போயிருந்தாரு. முந்தா நாள் ராத்திரி போனது. சரியா தூக்கமே இல்லயாம். வீட்டுக்கு வர்றதுக்கே மூணு மணி ஆயிருச்சு. வந்ததுமே சாப்பிட்டுட்டு படுத்துட்டாரு. எழுப்பி விடறேன்."

"வேண்டாம் வேண்டாம். கொஞ்ச நேரம் போகட்டும்" என்றதும் அம்மா போய் விட்டாள். சின்னப் பெரியப்பா அவனது படிப்பு பற்றி விசாரித்தார். பூ வியாபாரம் எப்படி இருக்கிறது என்று கேட்டதற்கு "ஏதோ ஒரு மாறியாப் போயிட்டிருக்குது" என்றார்.

ஹாலின் மற்ற இருக்கைகள், டீப்பாயின் மீதுள்ள பிளாஸ்டிக் பூ ஜாடி, சுவரில் மாட்டியிருந்த புகைப்படங்கள், ஓவியங்கள், மூலையில் இருந்த டீ.வி. என பார்வையிட்டுக் கொண்டிருந்தார்.

மேற்கொண்டு அவரிடம் என்ன பேசுவது என்பது கதிரின் யோசனையாக இருந்தது. அம்மாவோ அப்பாவோ எனில் வேறு ஏதாவது பேசுவார்கள். குடும்ப காரியங்கள், ஊர் நடப்பு என்று.

"கரன்டு இல்லியாக்கு? டீ.வி. ஓடாம இருக்குது!"

"இல்லீங்க பெரியப்பா. இந்த நேரத்துக்கு ப்ரோக்ராம் ஒண்ணும் நல்லதா இருக்காது. கேபிள் கனெக்ஷன் குடுக்கலாம்னா அப்பா வேண்டாங்கறாரு."

பெரியப்பா சிரித்தார். "ஆமாமா... படிப்பு கெட்டுப் போகுமல்லொ" என்றவர் பெரிதுபடுத்தின தாத்தாவும் பாட்டியும் சேர்ந்து எடுத்தது மாதிரியான புகைப்படத்தைப் பார்த்துவிட்டு எழுந்தார். அதற்குக் கீழே மட்டும் ஸ்டான்ட். அதில் தீபச் சுடர் வடிவில் ஒளிரும் குமிழ் மின்விளக்குகள். சந்தன மாலையும் வாங்கிப் போட்டிருந்தாள் அம்மா.

"வரைஞ்சாப்புல இருக்குது" கீழே நின்று அண்ணாந்து பார்த்தார் பெரியப்பா.

"ஒரிஜினல் ரொம்பப் பழசு. பூச்சி அரிச்சுடுச்சு. என் லார்ஜ் பண்ணி லேசா டச்சிங் பண்ணினதுனால அப்படி இருக்கு."

"ராஜா... தாத்தா பாக்கற தினுசு, அந்த முறுக்கு மீச எல்லாம் அசலா, உசுரோட இருக்கறாப்புலயே தோணுது." சொல்லிக் கொண்டே பெரியப்பா பிரம்பு நாற்காலிக்குத் திரும்பினார்.

தாத்தா உயிருடன் இருந்தால் இவ்வளவு நேரம் பெரியப்பாவை விட்டிருப்பாரா. "எங் கண்ணுக்கு முன்னால நிக்காதடா. அந்தள்ள போயிரு." என்று விரட்டியிருப்பார்.

எப்போதுமே தாத்தாவுக்கும் அவருக்கும் ஒத்துக் கொள்ளாது. பெரிய பெரியப்பா படிப்பு வராமல் போகவே ஒழுங்காக விவசாயத்தை கவனித்தார். கதிரின் அப்பாவுக்கு படிப்பு நன்றாக வந்தது. அத்தைகள் இருவருக்குமே காலா காலத்தில் கல்யாணத்தையும் செய்து வைத்தாயிற்று. எதிலுமே உருப்படாமல் போனது இவர் மட்டும்.

தாத்தாவுக்கு கல்லாபுரத்தில் எல்லாரிடமும் ஒரு மரியாதை, அவர் பேச்சுக்கு மதிப்பு இருந்தது. வீட்டிலேயும் மற்ற அனைவருமே அவருக்கு முன்னால் உட்கார்ந்து



பேசவும் பயப்படுவார்கள். அப்படிப்பட்டவரை சின்னப் பெரியப்பா மதிக்காமல் நடந்து கொள்வார். பெரிய மனிதர்களுடன் திண்ணையில் ஒரு பக்கம் தாத்தா நியாயம் பேசிக் கொண்டிருந்தால் இந்தப் பக்கம் கால் மேல் கால் போட்டுக் கொண்டு பீடி புகைப்பார்.

பதினேழு, பதினெட்டு வயதிலேயே - கிட்டத்தட்ட கதிரின் இப்போதைய வயது - அவர் குடியும் கூத்தியாளுமாகத் திரிந்தவர். சீட்டாட்டம், கோச்சைக் கட்டு, வண்டி ரேஸ் என்று போய் வம்புகளை சம்பாதித்து வருவார். பஞ்சாயத்து, போலீஸ் ஸ்டேஷனுக்கும் போக வேண்டி வரும். அபராதமும் அழுவும். அவ்வப்போது உள்ளேயும் இருப்பார்.

"என்ன கருமம் செஞ்சனோ இப்படி ஒரு தறுதலை எனக்குப் புள்ளையா வாச்சிருக்குது." தாத்தா வெதும்புவார். ஆனவரைக்கும் அவர் கட்டுப் படுத்தி, மிரட்டிப் பார்த்தார். சின்னப் பெரியப்பாவாவது மசிவதாவது. குடும்பத்துக்கு உபயோகமும் இல்லாமல் பரம்பரை கௌரவத்தையே பாழாக்குவதை அவரால் தாங்க முடியவில்லை. இனி வீட்டுக்கே வர வேண்டாமென்று சொல்லி விட்டாராம்.



"பொல்லா...த வீடு. யாருக்கு வேணும் உன்ற ஓட்டை வீடு. அப்பாறு சொத்துல என்ற பாகத்தப் பிரிச்சக் குடு. நான் நம்மட வழிக்கே போயர்றன்."

அப்படி வாங்கின பாகத்தையும் வைத்துக் காப்பாற்றவில்லை இவர். பண்ணையம் பார்க்கிற பொறுப்பு அவரது போக்குக்கு மாறானது. குத்தகைக்கு விட்டுவிட்டார்.

சில்க் ஜிப்பாவும் மைனர் செயினுமாக கொஞ்ச காலம். ஒற்றைக் குதிரை வண்டியும் வைத்திருந்தாராம்.

"குருதைன்னாலும் குருத அம்சமான குருத. செக்கச் செவலையா. வண்டியில்லாம அதுல தொரைக் கவுண்டரு சவாரி வந்தாருன்னா பேருக்கு ஏத்தாப்புலயே இருக்கும்."

பெரிய பெரியப்பாவின் பண்ணையத்து ஆள் நஞ்சான் சிலாகிப்பான். அந்தக் குதிரையையும் வண்டியையும் சீட்டாட்டத்தில் இழந்த பிறகு அவரது ராசியே போய்விட்டது என்று சொன்னதும் அவனே.

அதே சீட்டாட்டம்தான் அவரது சொந்தமாகி, குத்தகைக்கு விடப்பட்டிருந்த பூர்வீக நிலத்தின் பாகத்தை விற்கவும் காரணமாயிற்று. மிஞ்சினது ஒரு ஓட்டு வீடு. சின்னப் பெரியப்பாவைச் சுற்றிய நட்பு வட்டங்களின் மையமாக இருந்தது அந்த வீடு. மோதிரம், மைனர் செயின், ஃபாரின் வாட்ச் என ஒவ்வொன்றாக கரையவே, வட்டங்கள் விலகி தம்முள் சுருங்கிக் கொண்டன. தன்னந் தனிமையில் பெரியப்பாவுக்கு வீட்டில் தங்கவும் பிடிப்பற்று விட்டது. எப்போதாவது போதையில் தள்ளாடி வந்து கதவைச் சாத்தி அடைந்து கொள்வது கதிருக்கு எலிமெண்ட்ரி நாட்களின் ஞாபகமாய் வந்தது இப்போது.

முதலில் தாத்தாவும் அடுத்து பாட்டியுமாய் கண்ணை நிரந்தரமாக மூடிவிட்ட பிறகும் ஒரே

வீட்டில்தான் பெரிய பெரியப்பாவின் குடும்பமும் கதிரின் குடும்பமும் வாழ்ந்தது. அங்கெல்லாம் வர மாட்டார் சின்னப் பெரியப்பா. எலிமெண்ட்ரி ஸ்கூல் பக்கமாக வந்தால் அவனுக்கு கை நிறைய மிட்டாய்கள் வாங்கித் தருவார். வீடு திரும்புகிற நேரத்தில் என்றால் அய்யம் மக்கா கடையில் ரோஸ்ட், இரண்டு உளுந்து வடை, பால் டீ.

"பெரியப்பா... நீங்க சாப்படலயா."

"இல்ல ராஜா. நீ சாப்புடு. நான் அப்பறமா சாப்புட்டுக்கறேன்."

வீட்டில் வந்து சொன்னால் பெரிய பெரியப்பா திட்டுவார். "உனக்கென்னடா இங்க இல்லாமயா கெடக்குது. அவங்கிட்ட வாங்கித் திங்காட்டி."

"கரிசனம் கட்டீட்டு அளுகுதாம், கட்டுச் சோறு புட்டுட்டு அளுகுதாம்" என்று நீட்டி முழக்குவான் அடிக்கடி கைக் குழந்தைகளுடன் பேற்றுக்கு வருகிற நாச்சிபாளையத்து அத்தை.

மச்சூட்டுக்காரர்கள் என்ற பேர் கொண்ட குடும்பத்து ஆள் இப்படி சீரழிந்து போனதில் அனைவருக்குமே அவரிடம் வெறுப்பு. ஆதரவாக யாரும் முன்வரத் தயாரில்லை. அவரிடம் மிச்ச மீதி இருந்த கையிருப்பும் தீர்ந்துவிட்டது. உள்ளூரில் இன்னொருவரிடம் வேலை செய்து பிழைக்க சின்னப் பெரியப்பாவை தன்மானம் தடுத்தது.

வீட்டைப் பூட்டிவிட்டுப் போனால் இரண்டு மூன்று நாள் கழிந்து திரும்புகிறவர் ஒரு தடவை அப்படிப் போய்விட்டு வரவேயில்லை. பூளவாடியில் பார்த்தேன், பழனில மொட்டையடிச்சிட்டு வந்தாராமா என்று யார் யாரோ பேசிக் கொண்டார்கள்.

கதிர் ஏ. நாகூரில் ஹாஸ்டலில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தபோது அவர் கல்லாபுரம் வந்து இடிந்துபோன வீட்டை விற்று விட்ட தகவல் கிடைத்தது. பிறகுதான் அப்பா நிலத்தில் தனது பாகத்தையும் பெரிய பெரியப்பாவுக்கே கொடுத்துவிட்டு பொள்ளாச்சிக்குக் குடியேறியது.

கல்லாபுரத்துக்கு அப்பா போய் வரும் போதோ, குடும்ப சகிதமாக விடுமுறைக் காலங்களில் போகும்போதோ சின்னப் பெரியப்பாவைப் பற்றி ஏதாவது தெரிய வரும். கடைசியாக பூக்கடை வைத்து மருதமலையில் வாழ்கிற செய்தி.

இத்தனை வருடங்களாக சொந்த ஊருக்கே செல்லவில்லை அவர். இப்போது அங்கேயும் சென்று விட்டு இங்கேயும் எப்படி வந்தார் என்பது கதிருக்கு ஆச்சரியமாக இருந்தது.

அம்மா காப்பியும் பலகாரமும் கொண்டு வந்து டீப்பாயில் வைத்தாள்.

"இதெல்லாம் எதுக்கு?" அவர் சொல்வதற்குள் அம்மா திரும்பவும் உள்ளே சென்று விட்டிருந்தாள்.

"சாப்பிடுங்க பெரியப்பா."

சற்றுத் தயங்கினார். அவன் வற்புறுத்தியதும் "கையக் கழுவோணுமே" என்றார்.

சமையல் கட்டுக்கு நேராக உள்ள, பாத்ரூமை ஒட்டின அறையில் வாஷ் பேஸினுக்குக் கூட்டிச் சென்றான். முகம் அலம்பிக் கொண்டவருக்கு துண்டை எடுத்து நீட்டினான்.

சாப்பிடும்போது, "ஏன் ராஜா, இப்பவும் நீ காப்பி டீ குடிக்கறதில்லையா?"

"ஆமா பெரியப்பா. காலைல பூஸ்ட். ராத்திரி படுக்கறதுக்கு முன்னால ஒரு தம்ளர் பால். சாயந்திர நேரத்துல ஸ்நாக்ஸ் மட்டும் சாப்பிடுவேன்."

"பாலோட தெனமும் ஒவ்வொரு பேரீச்சம் பழம் சாப்புடு ராஜா. ஒடம்புக்கு நல்லது."

அவர் தனது இளமைக் கால ஆரோக்கியத்தையும் இப்போது தளர்ந்துவிட்டதையும் சொன்னவாறே சாப்பிட்டு முடித்தார். பேச்சு நிற்கவில்லை. நாற்காலியில் சாய்ந்து கொண்டு தொடர்ந்தார்.

சுவாரஸ்யமான சின்னப் பெரியப்பாவின்

"நான் சொன்னது ஹேண்ட்ஸ் அப். 'ஹேண்ட்ஸ் சப்' இல்லை. கையைச் சப்பிக்கிட்டு. கையைத் தூக்குய்யா!"
— வெ. ராஜாராமன்





"சீக்கிரம் லஞ்சப் பணத்தைக் கொடுங்க... பதினொரு மணிக்கு ராகுகாலம் துவங்குது!"

பேச்சு பாதியில் நின்றது. அவரது பார்வைக் கோணத்தைத் திரும்பி கவனித்தான் கதிர். அப்பா வந்து கொண்டிருந்தார். வீட்டில் இருக்கும்போது மட்டும் போட்டுக் கொள்கிற தோள் துண்டுடன் முகத்தை வீங்கச் செய்து கண்களையும் சிவக்க வைத்திருந்தது தூக்கக் கலக்கம்.

"ஏது அப்படியே தடந்தப்புனாப்புல இந்தப் பக்கம்..."

அப்பா ஸோஃபாவில் சரிந்து கைகளை விளிம்பில் போட்டுக் கொண்டார். சற்று முன்பு இருந்தது போலவே நாற்காலி நுனிக்கு வந்து பவ்யமானார் சின்னப் பெரியப்பா.

"தடந் தப்பித்தானே இந்தப் பொழப்பு."

அம்மா வந்து டம்ளரையும் தட்டையும் எடுத்துக் கொண்டாள். "உங்களுக்கு?" அப்பாவைக் கேட்கவும் அவர் தலையசைத்து மறுத்தார்.

அம்மா போகும்போது கதிரை உள்ளே அழைத்து சின்னப் பெரியப்பா எதற்கு வந்திருக்கிறார் என்று சொன்னாரா எனக் கேட்டாள்.

"இன்னும் சொல்லல. அப்பாகிட்ட சொல்லுவாரில்ல?"

"நல்லா இருக்கு பாக்கறதுக்கு, உங்க பெரியப்பாவ. பரதேசியாட்டம்."

"இங்க எதுக்கும்மா வந்திருப்பாரு?"

"இத்தன நாள் இல்லாம இப்ப திடீர்னு வந்து நின்னா யாருக்கு என்ன தெரியும். நீ போயி அவங்க ரெண்டு பேரும் என்ன பேசறாங்கன்னு கேளு."

கதிர் ஹாலுக்கு வந்து அப்பாவின் பக்கமாக உட்கார்ந்து கொண்டான். ரிமோட் கன்ட்ரோலைக் கையில் வைத்துக் கொண்டு டி.வி. பார்த்துக் கொண்டிருந்தார் அப்பா. பெரியப்பாவின் கவனமும் அந்த ஒரிய மொழித் திரைப் படத்தில்.

"சுந்தரேசன் ஸார்... எப்ப ஸார் வந்தீங்க?" ஜன்னலுக்கு வெளியே முன் வழுக்கைத் தலை எட்டிப் பார்த்தது.

"வாங்க ஜேயார். உள்ள வாங்க. கதவு தாழ் போடல."

ஜே.ஆர். ஸோஃபாவில் அப்பாவுக்கு இடது புறமாய் உட்கார்ந்து கொண்டார். அருணாசலம் எஞ்சினியரைப் பார்த்தீர்களா, இந்த முறையாவது மலைக் கோட்டை உச்சிப் பிள்ளையாரை தரிசிக்க வாய்த்ததா, இன்று மாலை தூர்தர்ஷனில் என்ன படம் என்கிற கேள்விகள்... பதில்கள். அப்பா ஒரியப் படத்தை நிறுத்தினார்.

"கெஸ்ட் வேற வந்திருக்காங்க போல இருக்கு. நான் வந்து டிஸ்டர்ப் பண்ணிட்டனோ."

"அதெல்லாம் ஒண்ணுமில்ல. நீங்க வந்ததுல என்ன தொந்தரவு இருக்கப்போவுது ஜேயார். பை த பை, இவர் எங்க சொந்த ஊர்க்காரர். கொஞ்சம் நெருங்கின பழக்கம்னு கூட சொல்லலாம்."

சின்னப் பெரியப்பாவைக் காட்டி அப்பா சொல்லவும் ஜே.ஆர். புன்னகைத்துக் கொண்டார். சின்னப் பெரியப்பாவின் முகம் இறுகியது. அப்பாவை ஏறிட்டவாறே மெல்ல எழுந்தார். சற்று நேரம் தலையைக் குனிந்து நின்றார்.

"அப்ப... நான் பொறப்படறேன்."

"ம்... சரி."என்றார் அப்பா.

கதிர் உள்ளே சென்று அம்மாவை அவசரமாக அழைத்து வந்தபோது படிக்கட்டில் செருப்புகளை அணிந்து கொண்டிருந்தார் சின்னப் பெரியப்பா. இருவரிடமும் பொதுவாக, "கௌம்பிட்டேன்" என்றார், நிமிர்ந்து பார்க்காமலேயே.

படியிறங்கி தளர்ந்து நடந்து தெருவில் அவர் போவதையே பார்த்துக் கொண்டிருந்தவனை அம்மா, "எதுக்கு வந்தாராம்?" என்று கேட்டாள்.

"எதுக்கு வந்தார்னு தெரியலம்மா. ஆனா இனிமே நிச்சயமா இங்க வரமாட்டாரு."

---

"உன் அப்பாவிடம் சொல்லி ஒரு ஸ்கூட்டர் வாங்கித் தாயேன்!"

"பத்து நாள் முன்புதானே ஒரு ப்ரிட்ஜ் வாங்கிக் கொடுத்தார்!"

"நிஜம்தான்! ஆனா ப்ரிட்ஜ் மேலே ஏறிக்கிட்டு ஆபீஸ் போக முடியாதே!"





"30.9.97 ஆபீஸ் வேலையா என்னை எங்காவது டூர் அனுப்பிடுங்க சார்!"

"ஏம்பா?"

"அன்று என் வெடிங்டே! அன்றும் மனைவியுடன் சண்டை போட எனக்கு விருப்பமில்லை!"

— உ. ராஜாஜி

'நக்கீரன்' கோபால்

# வீரப்பனும் நானும்

## 2

**1986**-ம் வருடம். அப்போதுதான் முதல் முதலாக வீரப்பனைப் பற்றிய செய்திகள் வரத் தொடங்கியிருந்தன. காட்டுக்குள் சந்தன மரங் களை வெட்டி, கடத்துகிற ஒரு கடத்தல்காரனாக மட்டும் அவன் அறிமுகமாகிக் கொண்டிருந்த நேரம். வீரப்பனைப் பற்றி என்ன' செய்தி வெளி யிட்டாலும் அப்போது ஈரோடு, சேலம், தர்மபுரி பகுதிகளில் பத்திரிகைகள் பரபரப்பாக உடனே விற்றுவிடும்.



1989ம் வருடம் திமுக ஆட்சியில் இருந்த நேரம். அப் போதைய டி.ஜி.பி. துரை, வீரப்பன் ஒளிந்திருக்கும் காட் டுக்குள் முதல்முறையாகத் தேடுதல் வேட்டைக்குச் சென்றார். 'ரூ 80 லட்சம் மதிப்புள்ள கடத்தல் சந்தன மரங்களை போலீஸ் கைப்பற்றியது' என்று அப்போது செய்தி வந்தது. பூமாலை என்கிற வீடியோ பத்திரிகை, கடத்தல் சந்தன மரங் களையும் காட்டுப் பகுதியில் போலீஸார் சென்றதையும் பட மெடுத்து வெளியிட்டது. அட, யாரப்பா இந்த வீரப்பன் என்று அப்போதுதான் நான் உற்று கவனிக் கத் தொடங்கினேன்.

வீரப்பனைப் பற்றி என்ன தகவல் வெளியிடு வதாக இருந்தாலும் அதற்கு போலீஸ் தரப் பில் அப்போது ஒரு படம்தான் தருவார்கள். சஃபாரி சூட் போட்டு, கை கட்டி நிற்கிற வீரப் பன் படம். 1980-82ல் எடுக்கப்பட்ட அந்த ஒரு படம் தவிர போலீ ஸிடம் அப்போது வேறு வீரப்பன் போட்டோ கிடையாது.

ஒரு பத்திரிகை ஆசிரியராக இருந்தாலும் அடிப்படையில் நான் லே-அவுட் ஆர்ட்டிஸ்ட் என்பதால் அடிக்கடி ஒரே படத்தை வெளி யிடுவது சலிப்பூட்டும் விஷயமாக இருந்தது. என்னால் இயன்றவரை அந்தப் படத்தையே கலர் மாற்றிப் போடுவது, படத்துடன் ஓவிய மாகவும் வரைந்து இணைப்பது என்று சிற்சில மாறுதல்கள் செய்து பார்த்தேன். திருப்தி யில்லை.

இந்தக் கால கட்டத்தில் - 1991ல் முதல் முறையாக வீரப்பன் ஒரு கொடூரமான கொலைகாரனாகத் தன்னை வெளிக்காட்டிக் கொண் டான். சீனிவாசன் என்கிற கர்நாடக டி.எஃப்.ஓ.வின் தலையை வெட்டி, வெறும் உடலை மட் டும் அவன் சாலையில் போட்ட சம்பவம் பெரும் பீதியை உண்டாக்கியது. பத்திரிகைகள் வரிந்து கட்டிக் கொண்டு இந்தச் செய்தியை எழுதித் தள்ளினாலும் படம்? அதே கை கட்டிய வீரப்பன் படம்தான்!

எனக்குப் பொறுக்கவில்லை.. பரபரப்பான எந்த ஒரு விஷயமோ, புகைப்படமோ - முதலில்



* முதல் பேட்டி: வீரப்பனும் சிவசுப்ரமணியனும்

போலவேதான் சேலத்திலிருந்து நிருபராக வேலை கேட்டு வந்த இளைஞர் சிவசுப்பிரமணியனிடமும் சொன்னேன். மற்றவர்களால் முடியாமல் போன அந்தக் காரியத்தை அவரால் மட்டும் எப்படி சாதிக்க முடிந்தது என்பதுதான் அன்றைய என் பெரிய வியப்பு.

பின்னால் ஐந்து முறை என்னுடன் சிவா காட்டுக்குள் வந்த போது அவரது வெற்றியின் காரணம் புரிந்து விட்டது. அவரது உழைப்பும் வேகமும் வெறியும் அசாத்தியமானது!

இன்றைக்கு நான் போய் வீரப்பனுடன் உட்கார்ந்து பேசி, ஒன்பது பேரை மீட்டு வந்தது பெரிய விஷயமாயிருக்கலாம். ஆனால், வீரப்பன் யார்? எப்படிப்பட்டவன்? என்று எதுவுமே தெரியாத நிலையில் - ஒரு பயங்கரவாதி என்கிற முத்திரையோடு அச்சத்துடனே நோக்கப்பட்ட கால கட்டத்தில், துணிச்சலாக முயன்று காட்டுக்குள் சென்று அவனைப் படமெடுத்து, பேட்டி கண்டது அதை விடப் பெரிய விஷயம்.

மாதக் கணக்கில் வீரப்பனின் கிராம மக்களுடன் பழகி, அவர்களைக் கேட்டுக் கேட்டு, வீரப்பனோடு தொடர்புள்ள கிராம வாசிகளைப் பிடித்து அவர்கள் மூலமாக முயன்று, ஆபத்துகளுக்கு அஞ்சாமல் காட்டுக்குள் சென்று வீரப்பனைச் சந்தித்துத் திரும்பினார் சிவசுப்பிரமணியன்.

வெளியிடுவது நக்கீரன்தான் என்றொரு இமேஜை நான் மக்களிடம் உருவாக்கிவிட்டபடியால், மற்றவர்களை முந்திக்கொண்டு எப்படியாவது வீரப்பனைப் படம் எடுத்து விட வேண்டும் என்று முடிவு செய்தேன். வீரப்பனை நான் முதல் முதலாகச் சந்திக்க முனைந்தது அப்போதுதான் - படமெடுக்கிற நோக்கம் மட்டும்தான்!

இந்தச் சந்தர்ப்பத்தில் கோவை, ஈரோடு, சேலம் போன்ற பகுதிகளிலிருந்து யார் என்னிடம் நிருபர் வேலை கேட்டு வந்தாலும் நான் ஒரே ஒரு கண்டிஷனைத்தான் போட்டேன்: வீரப்பன் என்பவன் நிஜமாகவே இருக்கிறானா? இப்போது அவன் எப்படி இருக்கிறான்? நேரில் போய் புகைப்படம் எடுத்து வர முடியுமா?

வேலை கேட்டு வருபவர்களிடம் மட்டுமல்ல; அந்தப் பகுதிகளில் ஏற்கெனவே என் நிருபர்களாக இருக்கிறவர்களிடமும் அந்த ஒரு வேலையைத்தான் வலியுறுத்திச் சொல்லியிருந்தேன். வீரப்பனைச் சந்திக்க வேண்டும். புகைப்படம் எடுக்க வேண்டும். முடிந்தால் பேட்டி.

எல்லாரிடமும் சொன்னது



* சஃபாரி சூட்டுடன் கை கட்டிய வீரப்பன்

சிவசுப்பிரமணியன் பேட்டி கண்டு திரும்பிய கால கட்டத்தைக் கொஞ்சம் கூர்ந்து பார்க்க வேண்டும். அது ஜெயலலிதா ஆட்சிக்கு வந்த சமயம். வீரப்



பன் வேட்டைக்காக தேவாரம் தலைமையில் சிறப்பு அதிரடிப் படைப் பிரிவு ஒன்று அமைக்கப்பட்டது. கோபாலகிருஷ்ணன் அந்தப் பிரிவின் எஸ்.பி.

போலீஸ் தரப்பில், "இன்னும் பத்து நாளில் வீரப்பனைப் பிடித்து விடுவோம், பதினைந்து நாளில் பிடித்து விடுவோம்!" என்று அறிக்கை மேல் அறிக்கையாக வந்து கொண்டிருக்கும். இன்னொருபுறம் அங்கே காட்டை ஒட்டிய கிராமங்களில் விசாரணை என்ற பெயரில் வன்முறை கட்டவிழ்த்து விடப்பட்டிருப்பதாக என் நிருபர்கள் தகவல் அனுப்பிக் கொண்டே இருந்தார்கள். கிராமவாசிகள் பயமும் பதற்றமும் கொண்டிருந்தார்கள். பலர் ஊரை விட்டே புறப்பட்டு விட்டார்கள், போலீஸ் தொந்தரவு தாங்காமல்.

இது ஒரு பக்கமென்றால் "வீரப்பன் இங்கே இல்லவே இல்லை: பம்பாய்க்கு ஓடி விட்டான்" என்று அதிரடியாக இன்னொரு புறம் அறிவித்தார் முதல்வர் ஜெயலலிதா. அது உண்மைதான் என்று அப்போதைய வனத் துறை அமைச்சர் செங்கோட்டையன் வேறு ஆமோதித்து வைக்க, முற்றிலும் எதிர்பாராமல் பாலாறு என்ற இடத்தில் 22 பேரை கண்ணி வெடி வைத்துக் கொன்றான் வீரப்பன்! போதாக் குறைக்கு, எஸ்.பி. கோபால கிருஷ்ணனின் உயிர் ஊசல்!

முதல்வர் அறிவித்தது தவறு, வனத்துறை அமைச்சர் வழி மொழிந்ததும் தவறு, வீரப்பன் இங்கேதான் இருக்கிறான் என்று மக்கள் நம்பத் தொடங்கிய சமயம். அதிரடியாக வெளிவந்தது சிவசுப்பிரமணியன் எடுத்த பேட்டி! அதுவும் பிரமாதமான படங்களுடன். மூன்று வாரங்கள் தொடர்ந்து வந்து மாநிலத்தையே அந்தப் பேட்டி கலக்கிய போது முற்றிலும் எதிர்பாராத, அதிர்ச்சி தரும் சம்பவம் ஒன்று நடந்தது. என்னைப் பொறுத்த வரை - எனக்கு அது வெட்கமான விஷயம்.

''நான் கொடுத்த அறிக்கைகளுக்கு, உங்க பத்திரிகையிலிருந்து எதுக்கு சன்மானம் தர்றீங்க?''
''ஹி... ஹி... நாங்க ஜோக்குகளுக்கு சன்மானம் தர்றது வழக்கம்!''
— பாம்பன் ஜெ. சல்மான்



புகழ் பெற்ற, பல மொழிகளில் வெளியாகிற, ஒரு பெரிய மாதமிருமுறை - தேசியப் பத்திரிகை, சிவசுப்பிரமணியனை ரகசியமாக அணுகி, தன்னுடன் இணைய அழைத்தது. சாதகமாகப் பேசி, ஆசை காட்டி, வீரப்பன் பேட்டியை வாங்கிக் கொண்டது - நக்கீரனில் முதல் இதழ் பேட்டி வெளியாகிற சமயம் இது நடந்திருக்க வேண்டும். அவர்கள் இதழில் பேட்டி வருவதற்குள் எங்களுடையதில் மூன்று வாரமும் வெளியாகி, முடிந்தே விட்டது.

எனினும், வீரப்பனை முதலில் சந்தித்து, பேட்டி வெளியிட்டது தாங்கள்தான் என்று கூறிக் கொண்டது அப்பத்திரிகை. அது எனக்குத் தாங்கமுடியாத வேதனையையும் வருத்தத்தையும் தந்தது. என் வருத்தத்துக்குக் காரணம் அது மட்டுமல்ல. என்னிடமிருந்து பிரித்து அழைத்துப் போன சிவாவையும் அவர்கள் ஏமாற்றியதுதான்.

எனக்கு சிவசுப்பிரமணியம் மேல் வருத்தமில்லை. யோசித்துப் பார்த்தால், அவர் நிலையில் நான் இருந்திருந்தாலும் அப்படித்தான் செய்திருப்பேனோ என்னவோ? ஒரு மாநிலப் பத்திரிகையின் நிருபராக இருப்பதைக் காட்டிலும் பண பலமும் வீச்சும் உள்ள மாபெரும் தேசியப் பத்திரிகையில் வாய்ப்பு கிடைக்கிறதென்றால்?

ஆனால், வீரப்பன் மேட்டரை மட்டும் வாங்கிக்கொண்டு அவர் வேறு பல விதங்களில் ஏமாற்றப்பட்டதாகச் செய்தி அறிந்ததும் உண்மையிலேயே வருந்தினேன். சிவாவை மறுபடி அழைத்துக் கொண்டேன் - நானே வலிந்து போய்.

எத்தனை பெரிய நிறுவனம் இப்படியொரு காரியம் செய்து விட்டதே என்கிற வெறுப்பும் கோபமும் பீறிட்டு எழ, 'எந்த சிவசுப்ரமணியனை என்னிடமிருந்து பிரித்துக் கூட்டிப் போய் பிரச்னை உண்டாக்கினார்களோ, அதே சிவசுப்பிரமணியத்தை வைத்து மறுபடி அதே வீரப்பனைச் சந்தித்து இன்னொரு முறையும் சாதித்துக் காட்ட முடிவு செய்தேன். முதல் முறை சந்தித்தது தாங்கள்தாம் என்று சொல்லிக் கொண்டார்களல்லவா? முடிந்தால் மறுமுறை முயன்று பார்க்கட்டுமே?

நான் சிவசுப்பிரமணியனிடம் மறுமுறை வீரப்பனைச் சந்திக்கத் தயாராகும்படி கேட்டுக் கொண்டேன்.

அது எப்படிப்பட்ட கால கட்டம் தெரியுமா? வீரப்பனின் அட்டூழியங்கள் அதிகரித்து விட, தமிழ்நாடு, கர்நாடகா போலீஸ் தவிர BSF என்கிற எல்லைக் காவல் படை வீரர்களும் வீரப்பன் தேடுதல் வேட்டையில் இறங்க, சுமார் ஐயாயிரம் போலீஸார் காட்டுப் பக்கம் குவிந்து விட்டனர். ஒரு ஈ, எறும்புகூட அவர்களுக்குத் தெரியாமல் உள்ளே எட்டிப் பார்த்துவர முடியாது! தவிர, போலீஸால் நெருங்க முடியாத வீரப்பனை நக்கீரன் அணுகி பேட்டி வெளியிட்டு விட்டதே என்கிற கடுப்பில் இருந்தனர் போலீஸார். இப்படிப்பட்ட சூழ்நிலையில் மறுபடி காட்டுக்குள் போக முடியுமா?

போனோம்!

(தொடரும்)

"நான் எழுத்தாளராகப் போகிறேன்!" என்று வாசுகி சொன்னதும் அந்தப் பத்தாம் வகுப்பு அறை முழுவதுமே சிரிப்பலைகளால் அதிர்ந்து போனது.

"இப்படியெல்லாம் முட்டாள்தனமாகப் பேசாதே. எழுத்தாளராவது அத்தனை சுலபமான விஷயமா என்ன! மிகச் சிறந்த அறிவாளிகளால் தான் முடியும். சாதாரண ராங்க் வாங்கும் உன்னைப் போன்ற கிராமத்துப் பெண்களெல்லாம் அப்படியொரு கனவு கூடக் காண முடியாது! ஒழுங்காகப் படித்து முன்னேறுகிற வழியைப் பார்!" என்று கண்டிப்பும் அறிவுரையுமாகச் சொன்னார் வகுப்பாசிரியை.

வாசுகிக்கு அவமானமாக இருந்தது. சக மாணவிகள் கிண்டலாகச் சிரித்தது கூட அவளுக்குப் பெரிய அவமானமாக இல்லை. வகுப்பாசிரியையே தன்னை இப்படி மட்டம் தட்டி விட்டாரே என்று நினைத்தபோது அவளுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. புரண்டு புரண்டு படுத்தாள். வெகுநேரத்திற்குப் பிறகு தன்னையறியாமலேயே தூங்கிப் போனாள்.

காலையில் விழிப்பு வந்த போதும் வகுப்பறையில் நடந்த முதல் நாள் நிகழ்ச்சியே மனத்தைக் குடைந்தது. எழுத்தாளராக வேண்டும் என்கிற தனது கனவு பிறரின் பலாத்காரத்தால் உடைந்து போய்விடுமோ என்கிற பயம்!

அந்த பயமே அவளுள் ஒரு வெளிச்சக் கீற்றை உருவாக்கியது போல் உணர்ந்தாள். உடனே தனது நோட்டுப் புத்தகமொன்றை எடுத்து எழுத ஆரம்பித்தாள். தலைப்பு : உடைந்த கனவுகள்! சுமார் பத்துப் பதினைந்து வரிகள் போல் எழுதினாள். என்ன எழுதினோம் என்பது கூட அவளுக்குச் சரியாக நினைவில்லை. நோட்டுப் புத்தகத்திலிருந்து அந்தத் தாளை அப்படியே கிழித்து ஒரு கவரில் போட்டு ஒட்டினாள். பிரபல பத்திரிகை ஒன்றுக்கும் அதை அனுப்பி வைத்தாள்.

ஒரு மாதம் போல் கழிந்தது. திடீரென்று அவளது வகுப்பறைக்குத் தபால்காரர் வந்தார். ஒரு பிரபல பத்திரிகை அலுவலகத்திலிருந்து அவளுக்கு இருபது ரூபாய் மணியார்டர் வந்திருப்பதாகக் கூறிக் கொடுத்தார். மணியார்டர் கூப்பனில், 'இந்த வார இதழில் உங்கள் கவிதை பிரசுரமாகியிருக்கிறதல்லவா! அதற்கான சன்மானமாகத்தான் இருபது ரூபாய் அனுப்பியுள்ளோம்' என்று ஒரு குறிப்பு.

விஷயம் வகுப்பறை முழுக்கத் தெரிந்து போனது. என்றாலும் அவளை யாரும் பாராட்டவில்லை. வகுப்பாசிரியை கூட, "ஏதோ குருட்டு அதிர்ஷ்டத்தில் உன் கவிதை பிரசுரமாகி விட்டது. இதற்காக நீ கர்வப்பட்டுக் கொண்டு விடாதே!" என்றுதான் இவளது உற்சாகத்தில் ஒரு குட்டு வைத்தாள்.

இதன் காரணமாக வாசுகிக்கு வருத்தம் ஒரு புறம் இருந்தாலும் எப்படியாவது தானும் ஓர் எழுத்தாளராக ஜெயித்துக் காட்ட வேண்டும் என்கிற உத்வேகம் அவளுள்.

அவ்வப்போது எழுதினாள். யாருக்கும் தெரியாமல் பத்திரிகைகளுக்கு அனுப்பினாள். அவையும் பிரசுரமாயின. என்றாலும் அதுபற்றி அவள் யாரிடமும் மூச்சுவிடவில்லை. சொன்னால், 'குருட்டு அதிர்ஷ்டம்' என்றுதானே சொல்வார்கள். இவளது திறமை என்று யார் பாராட்டப் போகிறார்கள்!

வாசுகி இப்போது பிளஸ் டூ முடித்து விட்டாள். மேற்கொண்டு படிக்க வேண்டுமானால் கல்லூரி தேடி நகரங்களுக்குத்தான் போயாக வேண்டும். அதற்கெல்லாம் அவள் குடும்பத்தில் வசதியில்லை என்பதால், கிராமத்திலுள்ள அவள் குடும்பத்துக்குச் சொந்தமான வயல்களில் வேலை, வீட்டு வேலைகள் என்று அவளது நேரம் போனது.

இடைப்பட்ட ஓய்வு நேரத்தில் அவள் எழுதினாள். எதையெதையோ படித்து, தமது அனுபவத்துக்கு அப்பாற்பட்டுச் சிந்தித்து அவள் எதையும் எழுதவில்லை.

தன் கண் முன்னால் நடந்து கொண்டிருக்கிற தனது கிராம மக்களின் இயல்பான வாழ்க்கை பற்றியும் போராட்டங்கள் பற்றியுமே எழுதினாள். தினசரி எழுதினாள். கிட்டத்தட்ட ஓராண்டு காலம் எழுதி முடித்த பிறகுதான் அவள் மொத்தத்தையும் மறு முறை படித்துப் பார்த்தாள். ஒரு நாவல் போலவே இருந்தது. பத்திரிகைக்கு அனுப்பினால் என்ன? அனுப்பி வைத்தாள்.

# வா.சு.கி.



சாமார் மூன்று மாதங்கள் கழித்து அந்தப் பத்திரிகை அலுவலகத்திலிருந்து ஒரு கடிதம், அவளுடைய நாவல் தொடர்கதையாகப் பிரசுரிக்கப் படப் போவதாக! 'ஒரு கிராமத்து வாழ்க்கையை இப்படியொரு யதார்த்தமாகப் படம்பிடித்துக் காட்டுவது மிகவும் அபூர்வம். அப்படியொரு அபூர்வத்தைத்தான் நீங்கள் செயல்படுத்திக் காட்டியிருக்கிறீர்கள். வாழ்த்துக்கள். இனி அடுத்த தொடர்கதையைக் கூட நீங்கள் இப்போதே எழுத ஆரம்பித்து விடுங்கள்; அதற்கும் எங்களது வாழ்த்துக்கள்!' என்று அந்தப் பத்திரிகை ஆசிரியர் எழுதியிருந்தார்!

வாசுகி இப்போது ஓர் எழுத்தாளர். தன்னைப் பற்றி அவள் பேட்டி கொடுக்க நேரும்போதெல்லாம் அவள் என்ன சொல்லுகிறாள் தெரியுமா?

"எழுத்தாளராவதற்கு நிறையப் படித்துப் பட்டங்கள் வாங்க வேண்டும் என்பதில்லை. வகுப்பில் முதல் ராங்க் வாங்க வேண்டும் என்கிற அவசியமும் இல்லை. கற்பனைக்கு எட்டாத விஷயங்களைப் பற்றியெல்லாம் சிந்தித்து எழுதுபவர்கள்தான் எழுத்தாளர்கள் என்பதுமில்லை. குருட்டு அதிர்ஷ்டம் அடிக்க வேண்டுவதுமில்லை. எழுத வேண்டும் என்கிற ஆர்வமும் விடாமுயற்சியும் இருந்தால் போதும்; கற்பனை வளம் என்பதெல்லாம் கூட இரண்டாம் பட்சம்தான். காரணம், மிகச் சிறந்த எழுத்தாளர்களின் எழுத்துக்களிலெல்லாம் தூக்கலாக இருப்பது உண்மைகள்தானே தவிர, கற்பனை அல்ல!"

முயன்றால் எதுவும் எல்லோருக்கும் சாத்தியம் தான்!

**எஸ்.ஜ.ஆர்.**

# நீங்கள் கேட்டவை – தராசு

● பி. ஜெயபிரகாஷ், சர்க்கார்பதி.

? 'தான் இறப்பதற்கு முன் காங்கிரஸ்காரர் ஒருவரை இந்தியப் பிரதமராக்குவதே தனது இறுதி லட்சியம்' என்று கேசரி கூறியுள்ளது குறித்து...?

! சீதாராம் கேசரியின் இறுதி லட்சியம் நிறைவேறும் வரை அவருக்கு மிக மிக மிக மிக நீண்ட ஆயுளை வழங்குமாறு இறைவனைப் பிரார்த்திப்போமாக!

● மல்லிகை மன்னன், மதுரை – 14.

? 'இன்னும் 100 ஆண்டுகளுக்குத் தி.மு.க. ஆட்சிதான். கலைஞரை யாரும் பதவியிலிருந்து இறக்க முடியாது எனச் சொல்கிறாரே த.மா.கா. எம்.எல்.ஏ. பொன்னம்மாள்?

! போச்சுடா! இடைத் தேர்தல் வரைக்கும் அடக்கி வாசிக்கணும்னு சொன்னாங்களேயொழிய ஜால்ரா வாசிக்கச் சொல்லலை!

● ப. சுகுமார், தூத்துக்குடி – 1.

? ஸ்டெர்லைட் ஆலையை மீண்டும் மூட அரசு உத்தரவிட்டிருக்கிறதே...?

! பட்ட காலிலே படும் என்பது மெய்யானாலும் கெட்ட குடியே கெடும் என்பது பொய்யாகட்டும். பாதுகாப்பு ஏற்பாடுகளைப் பலப்படுத்தலாமே தவிர கோடிக்கணக்கில் முதலீடான ஆலையை இயங்கவிடாமல் தடுப்பது அறிவுடைமையாகாது. அதனால் ஏற்படக்கூடிய தொடர் பாதிப்புகளை எண்ணிப் பார்க்க வேண்டும்.

● மீரா சம்பந்தம், மயிலாடுதுறை.

? சோனியாவை காங்கிரஸ் தலைவராக்கினால் காங்கிரஸ் உருப்பட்டுவிடும் என்று எந்த தைரியத்தில் இருக்கிறார்கள்?

! அசட்டு தைரியம்தான்!

● மு. கருணாநிதி, திருச்சி – 22.

? அண்ணாவுக்கு எம்.ஜி.ஆர். மாங்கனியாக இருந்தது போன்று, எம்.ஜி.ஆருக்கு ஒரு மாங்கனியாகக் கிடைத்தவர்தான் சுதாகரன் என்று எஸ். எஸ். ராஜேந்திரன் கூறியிருக்கிறாரே?

! அதெல்லாம் மறந்துடுங்க; இன்றைக்கு எம்.ஜி.ஆர்தான் எல்லா தமிழக அரசியல்வாதிகளுக்கும் ஒரு மாங்கனியாகக் கிடைத்திருக்கிறார். அவர் பெயரைப் பயன்படுத்தி ஆதாயம் அடைய முயற்சி செய்யாத தலைவர்களே இல்லை.

● வெ. சந்திரா, விழுப்புரம்.

? மனத்தில் கவலை சூழ்ந்திருக்கும் சமயத்தில் வாசகரின் கேள்விகளுக்கு பதில் அளிப்பது சாத்தியமா?

! கவலைகளில்லாத மனிதர்களே இல்லையே சகோதரி! சமாளிக்கும் வழி

* முன்னுதாரணர்!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
க. திருசங்கு,
குருந்தம்பட்டு - 630 305.
சிவகங்கை மாவட்டம்.



• மாங்கனி!



• கோபக் கேள்வி!



• போராட ஆயத்தம்!



• பலவீன பாதம்!



• மறந்த வித்தியாசம்!

இதுதான் : அந்தந்த கவலைக்கு ஓர் இடமும் நேரமும் மனத்தில் ஒதுக்கிவிட்டால் அந்த நேரத்தில் அதை அணுகி ஆராய்ந்து, தீர்வு காண முயற்சி செய்யலாம். மற்ற நேரத்தில் இதர விஷயங்களை கவனிக்கலாம்.

● **என். செல்வம், இலந்தப்பட்டி.**

? ***அ.தி.மு.க. ஆட்சியில் ஏழைகளும் பணத்தில் புரண்டார்கள் என்று மதுசூதனன் பேசியிருப்பது பற்றி...?***

! தேர்தல் சமயங்களில் ஏழைகள் தற்காலிகமாகப் பணத்தில் புரள்வதற்கும் நிரந்தரமாக ஏழைமையை ஒழிப்பதற்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் உண்டு. முன்னது வஞ்சம்; பின்னது அரசியல் – பொருளாதார ஞானம்.

● **ஜி. ஜெயராமன், கூந்தலூர்.**

? ***பகவத் கீதை – திருக்குறள், ஒப்பிடவும்.***

! முன்னது, கடவுள் மனிதனாகப் பிறந்து உபதேசித்தது. பின்னது மனிதர் கடவுள் அளவுக்கு உயர்ந்து அருளியது.

● **ரேணுகா, நீடாமங்கலம்.**

? ***மக்கள் தலைவர் மூப்பனாரிடம் காணும் நஷ்டங்கள் இராது; கட்டண உயர்வு காரணமாக,*** அரசியல் கலந்த எதிர்ப்பு இராது. வருவாயையும் முயற்சியையும் சாலை மேம்பாடு பக்கம் அரசு திசை திருப்பினால் நல்ல பலனும் இருக்கும்.

● **ஜி. ஜி. கிருஷ்ணன், விசலூர்.**

? ***'பேனாவும் பேப்பரும் இருக்குங்கறதனாலே என்ன வேணாலும் எழுதிடறதா?' என்கிறாரே கஹாசினி?***

! கூடாதுதான்... ஆனா, ஃபிலிமும் கேமராவும் இருக்கிறதனாலே என்ன வேண்டுமானாலும் எடுக்கறாங்களே!

● **க. திருசங்கு, குருந்தம்பட்டு.** ❑

? ***ஜெயலலிதாவுக்கும் சந்தன வீரப்பனுக்கும் உள்ள ஆறு வித்தியாசங்கள் எவை?***

! எந்த அரசியல்வாதியோடும் வீரப்பனை ஒப்பிட முடியாது. காரணம், தான் செய்த தவறுகளையும் கொலைகளையும் மறைக்காமல் உண்மை பேசுகிறானே!

● **இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.**

? ***'திரைப்படத் தொழிலாளர்களுக்காக அ.தி.மு.க. களத்தில் இறங்கிப் போராடத் தயார்' என்று ஜெயலலிதா கூறியுள்ளாரே?***

! ஏற்கெனவே அரசியல் சாயம் பூசப்பட்டுவிட்டதே! மறைந்து இருந்தது இப்போது வெளிப்படையாகத் தெரிகிறது. இனி புதுப்புதுப் பிரச்னைகள் அடிக்கடி தலையெடுக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

● **ஆர். மார்ட்டின், திருமானூர்.**

? ***கலவரங்களைத் தடுக்க ஒரு வழி கூறுங்களேன்...?***

! நூறு சதவிகித கல்வி; நூறு சதவிகித வேலை வாய்ப்பு.



• இறுதி லட்சியம்!



• தவறிய வாசிப்பு!

# திரைப்படத் தொழிலாளர்களுக்காக அ.தி.மு.க. போராடப் போகிறதாமே..?

***பிளஸ் ஃபேக்டர் எது?***

! தவறு என்று சுட்டிக்காட்டப்பட்டவுடன் திருத்திக் கொள்ள முன்வருவதுதான். பீட்டர் அல்போன்ஸ், ஜெயந்தி நடராஜன் ஆகியோரும் தம்மைப் பின்பற்றுமாறு செய்து, ராஜ்யசபை உறுப்பினர் பதவியை சட்டென்று ராஜினாமா செய்துவிட்டார் பாருங்கள்!

● **புளியரை கணேசன், சென்னை – 30.**

? ***கிராமங்களுக்குத் தனியார் வேன் சர்வீஸ் விரைவில் துவக்கப்பட உள்ளதாமே?***

! மிக நல்லது. இதை நகரங்களுக்கும் (பஸ்) விஸ்தரித்தால் சேவை மேம்படும். அரசுக்கு

● **ஜெ. கண்ணன், சென்னை – 101.**

? ***'சமுதாயத்தில் ஓரளவு வசதி படைத்தவர்கள்தாம் சமையல் காஸை உபயோகிறார்கள்' என்கிறாரே மத்திய பெட்ரோலியத் துறை அமைச்சர்...?***

! ரொம்பத் தவறான வாதம். மிக எளிய நிலையில் இருப்போர் கூட இன்று சமையல் காஸ் பயன்படுத்துகிறாகள். அடுத்தடுத்துவரும் ஆட்சிகள் அரசின் வீண் செலவுகளைக் கட்டுப்படுத்த முயற்சி எடுப்பதே இல்லை. மானியச் சுமை அதிகமாக இருக்கிறது என்று சாக்குக் கூறி மக்களைத்தான் வதைக்கிறார்கள்.

வண்ணப்படம் : யோகா






Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621
Annual Subscription : India Rs. 208/-; Overseas Rs. 1200/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 104/-; Overseas Rs. 600/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392/ 97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka